# மகாவீரர் வரலாறு

ஆசிரியர் :

எம். இ. வீரபாகு பிள்ளை, பி.ஏ., எல்.டி.

ஓய்வுபெற்ற ஆசிரியர்,

சிந்தாத்திரிப்பேட்டை உயர் நிலைப்பள்ளி, மதராஸ்.

ஒற்றுமை நிலையம்,

8, வியாசராவ் தெரு, தி. நகர், மதராஸ்-17.

பதிப்புரிமை ]          1957.          [ நயா பைசா. 62.

# பொருளடக்கம்

# முகவுரை

ஒவ்வொரு சமயமும் சமயத் தலைவர்களால் தோற்றுவிக்கவோ வளர்க்கவோ பெறுகின்றது. சமயத்தலைவர்கள் இலரேல் சமயந் தோன்றுமலோ அல்லது வளர்ச்சி பெறுமலோ போகக்கூடும். நமது நாட்டிலே சமய வளர்ச்சிக்குத் தொண்டு செய்த பெரியார்கள் பலர். சைவ சமயாச்சாரியார்கள் தோன்றிச் சைவசமய வளர்ச்சிக்குத் தொண்டு செய்ததைப்போல் ஒவ்வொரு சமயத்திற்கும் சமயத் தலைவர்கள் தோன்றித் தொண்டு செய்திருக்கின்றனர்.

சைனமதத்தைத் தோற்றுவித்து வளர்த்தவர் மகாவீரர். இவருடைய வரலாறும் புத்தருடைய வரலாறும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. வரலாறு மட்டுமே அன்றி உருவத் தோற்றமும் ஒரே மாதிரியாக இருக்கின்றது. சைனமதத் தலைவராகிய மகாவீரருடைய வரலாற்றை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். புத்தருடைய வரலாற்றைப்போல் மகாவீரருடைய வரலாறு நாட்டிலே பரவவில்லை. மகாவீரருடைய வரலாற்றைக் கூறும் புத்தகங்கள் சில ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளன. தமிழில் மூன்று புத்தகங்களே வெளிவந்துள்ளன. அவைகளைத் தழுவி மகாவீரரின் வரலாற்றை மாணவரும் பிறரும் தெள்ளிய முறையில் உணர்ந்து கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்தோடு

எளிய முறையில் எழுதி இப்புத்தகத்தை வெளியிடுகிறேன். இச்சிறு நூல் மகாவீரருடைய வாழ்க்கை வரலாற்றை எளிதில் உணர்ந்து கொள்வதற்குத் தக்க கருவியாக இருக்கு மென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

மகாவீரருடைய புகைப்படம் கொடுத்துதவிய அன்பர் திருவாளர் ஜீவபந்து T S. ஸ்ரீபால் அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக. தமிழுலகம் இவ் வெளியீட்டை யேற்றுப் பயன்படுத்தும் என்று நம்புகிறேன்.

28—11—57<br>
ஒற்றுமை நிலையம்<br>
சென்னை-17.

எம். இ. வீரபாகு.

# மகாவீரர் வரலாறு

## 1. பிறப்பு

எல்லோரையும் போல அவர் தோன்றவில்லை. பிறந்தவர் இறப்பர்: இடையே வாழ்ந்த வாழ்வு பலவகை. பல கோடிக்கணக்கான உயிர்கள் பிறக்கின்றன, இருக்கின்றன. இறக்கின்றன. நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு ஒருமுறை அடியார்கள் தோன்றி மக்களுக்கு நலம் செய்து மறைகின்றனர். ஆழ்வார், நாயன்மார்போன்ற அடியார் பலரும் நாட்டையும் நாட்டு மக்களையும் நல்வழிப்படுத்தத் தோன்றியவர்களே.

ஆயினும், நமது வரலாற்றுத் தலைவர் மக்களுக்கு மட்டும் அல்ல; மற்றைய எல்லா உயிர்களுக்கும் துன்பம் நேராதபடி தொண்டாற்றிய மகான் ஆவார். அவர் யார்? அவர்தாம் மகா வீரர் என்றவர். அரச மரபில் பிறந்தார். அனைத் துயிர்களுக்கும் அல்லும் பகலும் உழைத்தார். அவரது வரலாற்றை அறிந்துகொள்வது நலம் தருவதாகும்.

சித்தார்த்தர் என்னும் சிறந்த மன்னவர் ஒருவர் இருந்தார். அவர் கல்வியும் செல்வமும் நிறைந்த மகத நாட்டை ஆண்டு வந்தார். குண்டல புரத்தைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி செலுத்தி வந்தார். அவர் விதேக தேசத்தரசன் மகள் விதேகதத்தை என்பவளை மணம் புரிந்து வாழ்ந்தார். அவர்களுக்கு ஆண்மக்கள்

இருவரும், மகள் ஒன்றும் பிறந்தனர். மூத்தமகன் பெயர் நந்திவர்த்தனன் இரண்டாவது மகள் அவளுக்குச் சுதர்சனை என்பது பெயர் மூன்றமவரே உலகம் போற்றும் உத்தமராம் மிக்க அறிவுநிறைந்த மகாவீரர் ஆவார்.

இவரே நமது வரலாற்றுத் தலைவர். சிறந்த மகான். உலகம் போற்றி வணங்கிய உயர்சீலர். உயர்குணத்துச் செம்மல். அவர் மானிடப்பிறப்பு வாய்த்தவரல்லர். ஆதி ஜினதேவரின் கூறாகத் தோன்றிய சைன தீர்த்தங்கரரே யாவார். இன்றைக்கு இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர், உலக மக்கள் அறியாமையால் அறிவு மயங்கி அறிவற்றவர்கள் சொற்படி அறநெறி அற்ற வழியில் நடந்து வாணாட்களை வீணாட்களாக்கிப் பிறவிக் கடலில் ஆழ்ந்து வருந்தினர். பிறப்பு இறப்பெனும் சுழற்காற்றில் சுழன்று அதிலிருந்து தப்பிப்பிழைக்க வகை அறியாது தயங்கி இருந்தனர். அக்காலத்தில் அவர்களை உய்விக்க வேண்டும் என்ற கருணை உடையவராய் உத்தமியாகிய விதேக தத்தையின் வயிற்றில் பிறந்தார். அந்நாள் சித்திரை மாதம் அமர பக்ஷம் திரயோதசியாகிய நன்னாளாகும். இவர் தோன்றிய நாளில் பல நற்குறிகள் தோன்றின. மரங்கள் எல்லாம் மலர்மாரி பெய்தன. பறவை இனங்கள் பாடின. மலர் மணங்களை வாரிக் கொண்டு இளந்தென்றல் வந்து வீசியது. தந்நலங் கருதாது தாவரம் முதலியன மக்களினும் உயர்ந்த தொண்டு செய்து உதவின. இதனால் நாடெல்லாம் நலம் பெற்றது. நகரம் யாவும் களிப்பு மிகுந்தது.

பிறந்த குழந்தையைக் கண்டு பெற்றோராகிய சித்தார்த்தர் களிப்புக் கடலில் மூழ்கினர். அன்று சிறைச்சாலையை அறச்சாலை ஆக்கினார். அறங்களும் பரிசுகளும் அளவின்றி

வாரி வழங்கினர். கணிதநூல் வல்லாரை அழைப்பித்து பிறந்தநாட் பலன் கணிக்குமாறு பணித்தார். அரசன் ஆணையின்படி அவர்களும் அவ்வாறே கணித்து அதன் பயனையும் அறிவித்தனர்.

"வேந்தே! இந்த உலகம் எல்லா உலகங்களையும் விட மேன்மை அடைந்து விளங்கப் பெறுகிறது. உன்னுடைய பெயரும், குலமும் இவரால் நீடூழி விளங்கும். தெய்வத்தன்மை வாய்ந்த இவருக்குப் பெற்றோராகும் பெருமையைப் பெற்றனை" என்று கூறினர். அச்சிறுவருடைய திருமேனியின் இலக்கணங்களை அறிந்து வியப்பு அடைந்தனர் அரசனை நோக்கி, "மன்னனே! உமது திருமகனின் திருமுகம் களங்கம் அற்றதும் எப்பொழுதும் நிறைவுற்றதும் ஆகிய ஒரு முழுத்திங்களை ஒத்து விளங்குகின்றது. உண்மை அடியார்களுடைய உள்ளத்தாமரையில் எப்பொழுதும் ஒரே நிலையாய் ஒளி வீசத்தக்கது. இவர் வாயிலிருந்து வரும் அமுத உரையால் மக்களாகிய பயிர்கள் நோயின்றி வளர்ந்தோங்கும். இவருடைய உள்ளம் எலும்பு, நரம்பு, இரத்தம், தசை முதலியவைகளால் அமைந்துள்ளதாகத் தோன்றினும், அறிஞர்க்கு அருள், அன்பு, சமாதானம் பொறுமை முதலியவைகளால் அமைந்ததாகக் காணப்படும். இவருடைய திருவடிகள் முடிமன்னர் மணிமுடிமேலும், மற்றவர் தலைமுடிமேலும் மற்றொரு முடியாக விளங்குவனவாகும்.

மன்னரே, தங்கள் மகனின் பெருமை நாங்கள் கூறிய அளவுதான் என்று நினைக்க வேண்டாம். அவர் பெருமைகள் அளவில் அடங்காதன ஆகும். காலம் செல்லச் செல்ல எல்லாம் வெளிப்படும்" எனப் புகன்றனர். இவற்றைக் கேட்ட காவலன் களிப்புற்றான். உடலெல்லாம் புளகித்துப் பூரித்தான். காலக்கணிதம் கூறியவருக்குப்

பொன் முடிப்பு கொடுத்து புகழ்ந்து விடைகொடுத்து அனுப்பினன். அருமருந்தன்ன தன் மகனுக்கு வர்த்தமானர் என்று பெயர் கொடுத்து வளர்த்து வந்தனன். வர்த்தமானரும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்வாராயினர். காலஞ் செல்லச் செல்லத் தவழ்ந்து மழலைச் சொல்லோடு ஒழுகும் வாயூறல் அரை நனைப்ப நின்று தளர்நடை நடந்து கிண்கிணி ஒலிப்பத் தெருவெல்லாம் ஓடியாடி விளையாடுவார். பெற்றோர்கள் களிப்பப் பலருடன் கூடிக் கலந்து விளையாடுவார்.

## 2. கல்விப் பயிற்சியும், அனுபவ முதிர்ச்சியும்

வர்த்தமானர்க்கு வயது ஐந்தாகியது. தகப்பனார் அவரைக் கல்வி கற்கும் பொருட்டுப் பாடசாலைக் கனுப்பினார். பல பிறவிகளில் செய்துவந்த நல்வினைப் பயன்களெல்லாம் இந்தப் பிறவியில் பக்குவப்பட்டு விட்டது. இவர்க்குக் கற்பிக்கத் தொடங்கும் புதுப் பாடங்கள் எல்லாம் பழைய பாடங்களாகவே இருந்தன. ஆதலின், இவர் சில நாட்களில் பல கலைகளிலும், வேதங்களிலும், இதிகாச புராணங்களிலும், மற்றைக் கலைகளிலும் ஒப்புயர் வற்ற வல்லுநராகி விட்டார். வர்த்தமானர் கல்விக் களஞ்சியமாய் விளங்கினார். அதைக்கண்ட ஆசிரியர் அவர்மேல் மிகுந்த அன்பு கொண்டார். ஒருநாள், அந்த உத்தம மாணவரை அழைத்து அருகிலிருக்கச் செய்தார். "என் அன்பான மாணக்கனே, நீ பள்ளியில் வந்து கற்க வேண்டுவன வெல்லாம் மிக விரைவாகக் கற்றுத் தேர்ந்து

விட்டனே. ஆயினும் இவ்வுலக வாழ்க்கைக்கு இக்கல்வி அறிவு மட்டும் போதுமானதன்று. இன்னும் உயர்ந்த கல்வியொன்று இருக்கின்றது. அந்த அறிவையும் நீ தேடிக் கொள்ளல் வேண்டும். அவ்வறிவுதான் யாதோ? அதுதான், உலக அறிவு என்பது. பொதுவான கல்வி யறிவை எவரும் வெகு இலகுவில் பெற்றுக் கொள்ளலாம். அதைக் கைக்கொள்ள அளவுகடந்த பாடசாலைகளும், புத்தகங்களும் ஆசிரியர்களும் உண்டு. மற்றைய உலக அறிவைத் தேடிக் கொள்வதற்கோ இவ்வுலகம் ஒரு கல்லூரியாயிருக்கின்றது. உலகில் உள்ள அசையும் பொருள், அசையாப் பொருள்களெல்லாமே இதற்குரிய புத்தகங்களாகும். அறிவிக்கும் ஆசிரியர்களோ அளவிறந் தவர் ஆவர். எறும்பு முதல் யானை வரையுள்ள உயிர்கள் ஆசிரியராவார். ஒவ்வோர் உயிரும் ஒவ்வோர் உயர்ந்த அறிவை ஆசிரியர்போலச் செயல் அளவில் செய்து காட்டு கின்றது. வெறும் வாய் உரையால் சொல்லிக்காட்டாமல் அனுபவ முறையில் அறிந்துகொள்ளுமாறு போதிக் கின்றது. பாதையிலும் பக்கங்களிலும் அங்குமிங்கும் உள்ள மரம், செடிகள், கொடிகள் நன்றியுள்ளவைகள். தம் இளம் பருவத்தில் தண்ணீர் ஊற்றிக் காத்தவர்கட்கு இலை, காய், கனி முதலியவைகளைக் கொடுக்கின்றன. பருவம் வந்தும் மலராலும், மற்றவைகளாலும் மனிதர்க் கும் மற்றைய உயிர்களுக்கும் உதவித் தம் நன்றி மறவாமைப் பெருங் குணத்தைப் போதிக்கின்றன அல்லவா? உருவத்தில் மிகச் சிறியது எறும்பு. உயிருடன் கூடிய உடம்புள்ளவர் யாவரும் சிறுபொழுதும் வீண் காலம் போக்காமல் தமக்குரிய வேலைகளைச் சுறு சுறுப் புடன் செய்தல் வேண்டும் என்பதையும் கற்பிக்கின்றது. நாள்தோறும் இடைவிடாமல் சிறிது சிறிதாகச் செய்து கொண்டு வந்தால் சிறுபொழுதில் பெரிய பெரிய காரியங்

களையும் செய்து முடித்துவிடலாம் என்பதை இச்சிறு கறையான்கள் காட்டுகின்றன. இவைகள் கட்டிய இந்தப் புற்றைப் பாருங்கள். எவ்வளவு அழகாய் இருக்கிறது? எப்படிப்பட்ட சிற்பியாலும் இப்படி ஒரு மாளிகையை அமைக்க முடியுமா? இதில் எத்தனை மேடைகளும், அறைகளும் இருக்கின்றன! அவைகளெல்லாம் உணவுப் பொருள் சேமித்தற்கும், உறங்குவதற்கும், உலாவுவதற்கும், முட்டை யிடுவதற்கும், மற்றுமுள்ள சௌகரியங்களுக்கும் இடமாயிருக்கின்றன. இதனைக் கண்டும் தனக்கோர் இடம் பெற்று வாழாத மனிதனை மனிதனென்று யானெவ்வாறு சொல்வேன்? உலகத்தார் சீ என்று இகழ்ந்து விரட்டும் இந் நாய்களின் அறிவை என்னென்று சொல்வது! இவை தமக்கு அன்னம் கொடுத்தவரைக் கண்ட விடத்து ஓடிச் சென்று அவர் தம் முன்னடியில் வணங்குகின்றன. களிமுகங் காட்டி அவர் பின்றல் நடக்கின்றன. மற்றுமவர் ஏவின கேட்கின்றன. செய்நன்றி காட்டும் அருமைக் குணத்தை இவைகளிடத்திலன்றி மற்றெவரிடத்தில் கற்றுக்கொள்வது? ஆடுகள் அன்னியர்க்கு யாதொரு இடுக்கணும் புரியா; மனம் குழைந்து இனம் தழுவி வாழும் இனிய தன்மையை உடையது! எவரும் படித்துக்கொள்ள வேண்டியது, இந்த அருமையை இதுபோலவே, நரியினிடம் தந்திரத்தையும், புலி, கரடி, கடுவாய் முதலானவைகளிடத்தில் வீரத்தையும், சிங்கத்தினிடத்தில் உயர்ந்த வீரத் தன்மையையும், யானையினிடத்தில் அடத்தோடு வல்லமையையும், அஞ்சாத குணத்தையும் காணலாம்,

காக்கையிடம் ஒழுக்கத்தை உணரலாம். கொக்கு அடக்கத்தை அறிவிக்கிறது. காலம் பார்த்துக் குறிப்பிட்டதைக் கவர்ந்து கொள்ளும் மீன் கொத்திக் குருவியின் செய்கை வியப்பை உண்டாக்கும். கிளைகளைக் கூவி

யழைத்துத் தாவிக் களைத்து விளையாடுவதில் ஆந்தைக்கு ஒப்பானது எது? இவ்வாறு பல பறவை விலங்குகளின் மூலம் அறிவையும் நல்ல குணங்களையும் நேரிற் கண்டு தெளிந்து கைக்கொள்பவரே மக்களுக்குள் மிக்காரெனப் போற்றப்படுகின்றனர். எவ்வகைத் தொழிலாளிகளிடத்தும் தொழிலிடத்தும் தாழ்வாக மதிக்காமல் பழக்க முன்னவனாய் இருத்தல் வேண்டும் இன்றேல் அத்தொழிலாளிகளின் இன்ப துன்பங்களை எல்லாம் செல்வர் சிறிதும் அறிய முடியாது. மேலும் பணக்காரர், ஏழை, சிறியவர், பெரியவர், கற்றோர், கல்லாதவர், கீழானவர், மேலானவர் முதலானவர்களுடன் சிறிது காலமாவது கூடிப் பழக வேண்டும் அப்போதுதான் அவருடைய இன்பத் துன்பங்களைக் கண்டறிய முடியும். இவ்வாறு தெரிந்து கொள்ளுதலே உலகறிவு எனப்படும்.

"உலகத்தினறிவு கல்லாவொருவனை உயர்ந்தோர்
யாரும் பல கற்றும் கல்லானென்பர்."

"உலகத்தோ டொட்ட ஒழுகல்பல கற்றும் கல்லாரறிவிலாதார்;" என்பது ஆன்றோர் கூற்று. எல்லோருக்கும் உலக அறிவு பொதுவாக இருக்க வேண்டும் முக்கியமாக அரச குடும்பத்தில் பிறந்தவர்களுக்கு மிக இன்றியமையாது இருக்க வேண்டும்.

வர்த்தமான! நீ கல்வியிற் சிறந்து விளங்குகிறாய், அதுபோலவே கேள்வியிலும் மேம்பட வேண்டும். "கற்றலில் கேட்டலே நன்று" "கேள்வி முயல்" என வழங்கும் பழமொழிகளை எண்ணிப்பார். இன்று முதல் அறிவாளிகள் செய்யும் சொற்பொழிவுகளை ஆவலுடன் கேட்டு அறிந்து கொள்ளுதல் வேண்டும். அன்றியும் கல்வியின் பயன் அடக்கமும் பிறர்க்கு உபதேசித்தலுமே ஆகும்

கல்வியறிவு மட்டும் உள்ளவன் தன்னடக்கமுடைய வனாய் இருப்பான். பிறர்க்கு அவனால் யாதொரு உதவியும் இராது. கல்வியும் கேள்வியுமுள்ள ஒருவன் தன்னடக்கமுடையவனாய் நடப்பான். பல அரிய பெரிய விஷயங்களை எடுத்துரைத்து இவ்வுலகத்தையும் நல்வழிப் படுத்துவான். பலகாலம் கற்க வேண்டிய கல்விகளை எல்லாம் சில காலத்தில் கேள்வியால் அடைந்து விடலாம் என்பதற்கு ஐயமில்லை. கல்விக்கு ஆசிரியன் ஒருவனே போதுமானவனாவான். கேள்விக்கோ போதகர்கள் பலர் வேண்டியிருக்கின்றனர். தேனீக்கள் பலவிதமான மலர்களிலிருந்து சுவையுள்ள தேனைச் சேர்த்துக்கொள்வதைப் போல உத்தமமான அறிஞர்கள் கூறும் நல்லுரைகளைக் கேட்டு அவைகளிலுள்ள உயர்வான கருத்துக்களையெல்லாம் தனது உள்ளத்தில் நிறைய வைத்துக்கொள்பவனே தற்கால உலகத்துக்கு இன்றியமையாதவனாய் இருக்கின்றான்" என்றனர்.

## 3. இளமைப் பருவம்

இவ்வாறு கூறக்கேட்ட வர்த்தமானர், தம் ஆசிரியர் கூறியபடியே கேள்வியிலும், உலக அறிவிலும் சிறப்புற்று விளங்கலாயினர். அரசகுலத்துக்குரிய கலைகளாகிய யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வில், வாள், வேல் முதலிய ஆயுதப் பயிற்சிகளிலும் தேர்ந்தனர். அப்பொழுது அவருக்கு வயது பதினெட்டு. நல்ல இளம் பருவம் வாய்க்கப் பெற்றார். இவருக்குத் தாய் வயிற்றிலிருக்கும்போது ஒட்டி வந்த அருளுடைமை அவர் உள்ளத்தோடு உயர்ந்து ஓங்கிக் கொண்டிருந்தது. அவருடைய முடி தழைத்துக்

கருத்துப் பின் பாதம் வரை நீண்டிருந்தது. நெற்றி அகன்று நீண்டிருந்தது. கண்களோ கருணை கலந்தமைந்த தாமரை மலரை ஒத்திருந்தன. காதுகளோ, ஏழைகளும், துன்பமுற்றோரும் சொல்லும் சொற்களைக் கேட்பதோடு மணியணிகளாலும் ஒளி வீசிக்கொண்டிருந்தன. வாயோ அமுதமாரி பொழியும் தன்மையதாயிருந்தது. கனகமாலையும் கருணை மாலையும் கலந்தணிந்த புயங்களினழகை எவராலேதான் வருணிக்க முடியும்? அவருடைய மார்பு அருள் என்னும் அரும் பொருளை நிரம்பவைத்துப் பூட்டியிருக்கின்ற பெட்டகம் போலிருந்தது. உலக குருவாய் விளங்குவதற்குரிய ரேகை அடையாளங்களை உடையனவாய் கைகள் இருந்தன. சத்துள்ள அளவான உணவால் சுருக்க முற்றிருக்கும் அழகிய வயிற்றிற்கு அவ்வயிறே ஒப்பாவதன்றி வேறில்லை. இரு தாமரை மலர்கள் ஒருதண்டில் இருக்குமானால் அவைகள் இவருடைய பாதங்களுக்கு உவமையாகும். வண்ணத்துக்கேற்ற வடிவு வாய்க்கப்பெற்றவர். பொன்போன்ற உடல் ஒளியை உடையவர். அவரழகைக் கண்டு வியப்படையாதவரில்லை. முன்னழிந்த மாரன் முப்பத்திரண்டு இலக்கணங்களும் பெற்று யௌவன குமாரனாக வெளிப்பட்டனன் எனக் கவிவாணர்கள் வர்ணிக்க வர்த்தமானர் விளங்கினார். மேலும் அவர் வீரத்தால் சிங்கத்தையும், பொறுமையால் பூமியையும், கொடையால் மேகத்தையும், நடு நிலைமையால் துலாக்கோலையும், தீரத்தால் மேருவையும் ஒத்து விளங்கினார். அவருடைய தோற்றம் அதிக கம்பீரமாயும் எவரையும் வசப்படுத்தத் தக்கதாயு மிருந்தது.

# 4. உலக உணர்வும் உள்ளக் கரைவும்

அரசச் செல்வத்தாலும், மிகுந்த அழகாலும், இளம் பருவத்தாலும், கல்வி கேள்விகளாலும், நல்லொழுக்கத்தாலும், ஒப்பு உயர்வு அற்றவராய் விளங்கிய வர்த்தமானர் ஒருநாள் தம் தந்தையாரின் ஆட்சியில் அடங்கியே நாடு நகரங்களை எல்லாம் பார்த்துவரப் புறப்பட்டார். ஓரிடத்து ஓடொன்று ஏந்தி இரப்பார் ஒருவரையும் அவருக்கு ஒன்றும் கொடாது ஓடென்று விரட்டிடுவோரையும் கண்டார். காளைப் பருவத்தின் பெருமிதத்தால் களிப்பாரையும், பணத்தின்மேல் படுத்துக் கிடப்பாரையும், வறுமையால் சோர்ந்து தரையில் புரளுவாரையும், பாலுக்குச் சீனி இல்லையே என்று பரிதபிப்பாரையும், கூழுக்கு உப்பில்லையேயென வருந்துவாரையும், பாடிக் கையேந்துவாரையும், அவரை ஓடிக் கையோங்குவாரையும், சிவிகைமேல் சாய்ந்திருப்பாரையும், அதனைச் சுமந்து நடப்பாரையும், ஆடையின்றி வாடையால் மெலிவாரையும், மிகுந்த ஆடை உடுத்திருப்பாரையும், உண்ணச் சோறு இல்லையே என வாடித் தத்தளிப்பாரையும், உண்டசோறு சீரணம் ஆகவில்லை என்று ஓடி ஓடி பந்தடிப்பாரையும், வலிமையுடன் நடப்பாரையும், மூடத்தால் கிடப்பாரையும், பெற்றோரை இகழ்ந்தடித்து ஓட்டுவாரையும், மற்றவரைப் பூசித்தளித்துப் போற்றுவாரையும், அடுத்துக் கெடுப்பாரையும், அடி நாக்கு நஞ்சும், நுனி நாக்கு அமுதமுமாவாரையும், ஒருவர்க்கு ஒன்று கொடுப்பாரையும், கொடுப்பாரைத் தடுப்பாரையும், அடிமையாளரைக்கடுமையாக வேலை வாங்குவாரையும், மிதமிஞ்சின வட்டியால் பணத்தைக் கொட்டிக் குவிப்பாரையும், கைப்பொருள் இழந்து தவிப்

பாரையும், தானடங்காது பிறரடங்கப் போதிப்பாரையும், பசுவின் தோல் போர்த்த புலியாவாரையும், கொல்வதற் கென்றே பிராணிகளை வளர்ப்பாரையும், அவைகளை வதைப் பார்க்கு விற்பாரையும் கண்ணுரக் கண்டார்.

புலால் விற்பாரையும், புலாலைப் புசிப்பாரையும், காரணமின்றிப் பிற உயிர்களைக் கொல்வாரையும், நல்லது தீயது நடைபெறும் காலங்களில் கருணையின்றி அளவு கடந்த உயிர்களை அறுத்துக் கொன்று உண்பாரையும், பிசாசுகளின்மேல் பழி சுமத்தி வாயில்லா உயிர்களின் தலையைத் துணித்து உண்பாரையும் கண்டார். வினை நீங்கு மென்றும், பிணி போய்விடுமென்றும், வீடு கிடைக்கு மென்றும் நினைத்து அளவற்ற உயிர்களை எமன் உலகத் துக்கு அனுப்புகின்றனர் என்று வருந்தினர்.

உயிர்களும் ஒன்றை ஒன்று பிடித்துக் கடித்து உயிர் துடிதுடிக்கத் தின்னுகின்றன. இவைகளை எல்லாம் வர்த்தமானர் கண்ணுரக் கண்டார். ஜீவகாருண்யத்துக்கே இருப்பிடமாக உள்ள வர்த்தமானர் மனம் நெருப்பில் பட்ட அரக்குப்போல உருகிற்று. என்ன இந்த உலகம்! உயிர்களைக் கொலை செய்கின்றனர். உலகம் ஒரு கொலைக் களமா? போர்க்களமா? அல்லது பழி பாவங்களை உண் டாக்கும் வினை நிலமா? ஒன்றும் உணர முடியவில்லையே இவ்வுலகில் பிறந்த உயிர்கள் எல்லாம் ஓர் இன்பத்தையும் அறியவில்லை. துன்பத்தால் சோர்வடைகின்றனர். ஒன்றை ஒன்று பிடித்து உண்ணுகின்றன. நிலத்திலும், நீரிலும், வானத்திலும், எங்கும் ஒதுங்கிப் பிழைப்பதற்கு ஓரிடம் இல்லாமல் இருக்கின்றன. இதைக் காணும்பொழுது என் உள்ளம் தாமரை இலையில் பட்ட தண்ணீர்போல் தத்தளிக் கின்றது. அந்தோ! இஃது என்ன உலகம்! இவ்வாறு ஓர் உலகம் இருக்குமா? என்று பலவாறுகூறி வருத்தம்

அடைந்து உள்ளம் வாடி வருந்திஞர். அழுதார், சிரித்தார். சிறிது நேரம் சும்மா இருந்தார். செய்வது ஒன்றும் உணராமல் கண்களை மூடிக்கொண்டு யோகம் செய்வாரைப் போல அசையாமல் உட்கார்ந்திருந்தார். சிறிது நேரம் கழித்துக் கண்களை விழித்தார். "ஏன் இவ்வுலகம் இவ்வாறு வருந்த வேண்டும்? மக்கள் எல்லோரும் அன்புடையவராய் ஏன் வாழக்கூடாது? அறநெறி உடையவராய்க் கருணையோடு வாழக்கூடாதா? மற்ற உயிர்களும் மனம் குழைந்து இனம் தழுவிப் பகைமை நீங்கி இனிமையாகக் காலம் கழிக்கக்கூடாதா? இவ்வுலகம் இவ்வாறு இருப்பதற்குக் காரணம் என்னவோ?" எனத் தம் மனத்துள் நினைத்தார். உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போல ஒற்றுமையோடு அளவளாவி வாழ வழி ஏதேனும் உண்டோ என்று கருதிஞர். அதனைக் கண்டு பிடிக்க வேண்டும். அப்படிக் கண்டு பிடிப்பது நமது வேலையே எனத் துணிந்தார். தமது உள்ளத்தை இத்தகைய சிந்தனையைப் போகக்கி ஒருவருமில்லாத இடத்தில் அசைவு அற்று உட்கார்ந்து விட்டார். துன்பத்தையும் உறங்குவதையுங்கூட அவர் சிலகாலங்களில் கவனித்ததில்லை. இவ்வாருகக் காலம் சென்றது.

## 5. மணமும் மறுப்பும்

**வ**ர்த்தமானர் உலகத்தை நல்வழிப் படுத்தத் தோன்றிய மகான். அதை அறியாது சாதாரண பிள்ளை என்று அவர் பெற்றோர் கருதினர். அதனுல், ஒருநாள் வர்த்தமானரை அழைத்து பக்கத்தில் அமரச் செய்தனர்.

" அப்பா வர்த்தமானு, நீ கற்கவேண்டிய கலைகளையெல்லாம் கற்றுக் கொண்டாய் உலக அறிவும் உனக்கு வேண்டிய அளவு வந்துள்ளது. இப்போது நீ இளமைப் பருவம் அடைந்து இருக்கிறுய். இவற்றை எல்லாம் கண்ட நாங்கள் அளவிலா மகிழ்ச்சி அடைகிறோம். ஆயினும், நீ ஓர் அழகிய பெண்மணியை மணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கை நடத்துவதைக் கண்டு களிக்க வேண்டும் என்பது எங்கள் ஆசையாகும்." என்று கூறினர். அதைக்கேட்ட வர்த்தமானர் பெற்றேரை வணங்கினுர். உடனே பதில் சொல்லத் தொடங்கினர்.

" எனது அருமைப் பெற்றேரே, தயவுசெய்து நான் சொல்வதைக் கேளுங்கள். நான் இவ்வுலகத்திலுள்ள சில நாடு நகரங்களைச் சுற்றிப் பார்த்து வந்தேன். பார்த்த இடமெல்லாம் கொலையும் கொடுமையும் நிறைந்துள்ளன. பொய்யும் வஞ்சமும் பொருந்தியுள்ளன. நன்னெறி நீங்கிய செயலும் தீய ஒழுக்கமும் நடக்கின்றன. இவற்ருல் எல்லா உயிர்களும் அளவு கடந்த துன்பத்தை அனுபவிக்கின்றன உலகில் உள்ள உயிர்களுக்கு அழிவு நேரு

எறும்பு முதல் யானை வரையில் உள்ள உயிர்கள் ஏன் இவ்வாறு வருந்த வேண்டும்? இதற்குக் காரணம் என்ன என்று பலநாள் வரையில் நான் சிந்தித்துப் பார்த்தேன். சில காரணங்களே தோன்றின. அவற்றுள் முதற் காரணம் இக்காலத்தில் உள்ள மதங்களே ஆகும்" என்று ஒருவாறு துணிந்தேன்

அதனுல் இப்போதுள்ள மதங்களில் பழிக்கும் பாவத்திற்கும் உரியவைகளை நீக்கி புகழுக்கும் அறத்திற்கும் அடிப்படையான கருத்துக்களைச் சேர்த்து அரிய சமயம் ஒன்றை அமைத்து எங்கும் பரவும்படி செய்து இவ்வுலகத்தைப் புண்ணிய உலகமாக்க நினைத்திருக்கிறேன். என்

எண்ணம் எல்லாம் இச்செயலில் ஈடுபட்டிருக்கிறது. அதற்கு இடையூறாகத் திருமணம் செய்து கொள்ளும்படி சொல்லுகிறீர்கள். குடும்பத்தை நடத்துவது கடமை என்கிறீர்களே; நான் எவ்வாறு அப்படிச் செய்ய முடியும்? இப்போது உலகில் உள்ள உயிர்களின் எண்ணிக்கையோ மிக அதிகம். அவைகள் படும் தொல்லையோ அளவில் அடங்காதது. அவற்றை எல்லாம் கண்ட நான் இல்லறத்தை நடத்தி மக்களைப் பெற்று அவர்களும் துன்பத்தில் அழுந்த நான் எவ்வாறு துணிவேன்? நீங்கள் உங்கள் கடமையை நிறைவேற்ற இவ்வாறு கூறினீர்கள். இஃது உங்களுக்கு ஏற்றதேயாகும். ஆனாலும், அஃது என்னைப் பொறுத்த வகையில் எனக்குப் பொருந்தியதாக இல்லை. நான் என்ன செய்வேன்" என்று மிகப் பணிவோடு பதில் கூறினார்.

மைந்தன் கூறியதைக் கேட்ட பெற்றோர் திகைத்தார்கள். தம் மகன் அளவிறந்த இரக்கங்கொண்டிருப்பதை உணர்ந்தனர். அவர் துணிவை அறிந்தனர். அதனால் மனத்தில் திகைப்பை அடைந்தவராய் வர்த்தமானரை நோக்கிச் சொல்லத் தொடங்கினர்.

"அப்பா! நீ என்ன இவ்வாறு கூறுகிறாய்? உலகில் உள்ள மக்களுடைய துன்பங்களையெல்லாம் நீ ஒருவனே எப்படி நீக்க முடியும்? உயிர்களுக்கு அவைகள் செய்த கருமத்திற்கு ஏற்றவாறு துன்பம் வரக்கூடும். அவற்றைத் தடுக்க எவராலும் ஆகாது. "ஊழிற் பெருவலி யாவுள" என்று ஆன்றோர் கூறுவதைக் கேட்டதில்லையா? முன்னோர்கள் வகுத்த மதங்கள் பல நம் நாட்டில் எங்கும் பரவி வேரூன்றி இருக்கின்றன. இனிமேல் நீ நாட்ட விரும்பும் புதிய மதம் எவ்வாறு பரவும்? "மரத்தின்கீழ் உண்டாகா மரம்" என்பது உலகறிந்த உயர்மொழி. நினைத்ததை முடிக்கும் பேராற்றல் பெற்றவர்களும் பெரிய

அறிவு பெற்றவர்களும் ஆகிய பழங்காலப் பெரியோர்களால் உண்டாக்கப்பட்ட மதங்கள். அவை குற்றம் நிறைந்தது என்கிறாய் இவ்வார்த்தைகள் சிரிப்புக்குரியவையாகும்.

அந்தப் பெரியோர்கள் கூறியவற்றில் அருவருக்கக் கூடிய கருத்துக்கள் எவ்வாறு கலக்கும்? அப்படிக் கலந்திருந்தாலும் அவைகளை நீக்கித் தூய்மைப் படுத்துகிறவன் நீயோ? நீ அவர்களைப் பார்க்கிலும் மிகுந்த அறிவாளி போலும்! வர்த்தமானா. இனி நீ ஆன்றோரைப் பற்றித் தகாத வார்த்தைகளைக் கூறிப் பழிக்கு ஆளாகாதே. உயிர்கள் ஒன்றை ஒன்று பற்றி உண்ணுதல் பிறப்புரிமையாக இருந்து வருகிறது. அதைத் தடுக்க எவராலும் ஆகாது. பிறவியிலேயே முடமானவற்றை மட்டை வைத்துக் கட்டுவாரும் உண்டோ? உயிர்களிடம் மக்கள் அன்புகொள்ள வேண்டியது கடமையே. ஆனாலும், அதை அளவு கடந்து மேற்கொள்ளுதல் பிறர் நகைப்பிற்கு இடமாகுமேயன்றி வேறில்லை. மலைகள் காய்கின்றன; கடல் தத்தளிக்கிறது. ஆனால் அவற்றைக் கண்டு இரக்கங் கொள்வதால் வரும் பயன் யாது? அதுபோலவே, நீயும் வீணான வழியில் கருணை செலுத்தி கவலைப்படுகிறாய்: இஃது அறிவீனமான செயல். இந்த எண்ணத்தை இப்போதே விடு. பெற்றோர் கூறியபடி திருமணத்தை முடித்துக்கொள். எங்களை இன்புறச் செய்து இனிது வாழ்க. பெற்றோர் கூறும் அறிவுரையைக் கேளாது நடப்பது நல்ல பிள்ளைகளுக்கு அழகல்ல" என்று கூறினர்.

# 6. தன்னை விளக்கல்

இருமுது குரவரும் மேற்கண்டவாறு கூறிய மொழிகளை இனிது கேட்டார் வர்த்தமானர். புன்னகை புரிந்தார். "தம்மை இன்னரென விளக்கினல் தமது எண்ணத்தைப் பெற்றோர் நிறைவேற்றுவர்" என்று கருதினர். அதனல், அவர் தம் பெற்றோரை நோக்கி, "முதியோரே, யாரும் உணராத ஒரு செய்தியை நான் இப்போது உங்களுக்கு வெளியிடப் போகிறேன். அதை நீங்கள் கேட்டு அதற்குப் பிறகு எனக்கு ஏதேனும் சொல்லுங்கள். நீங்கள் என்னை இதுவரையில் சாதாரண மனிதர் கூட்டத்தில் சேர்ந்தவனுக நினைத்துச் சொல்லுகிறீர்கள். என்னைப்பற்றி நீங்கள் உணரவில்லை. நீங்கள் உங்கள் மகன் என்று என்னை எண்ணுகிறீர்கள். தெய்வக் கட்டளையை மேற்கொண்டு வந்துள்ள தெய்வத்தன்மையுடையவன். உற்று உணர்ந்தால் உங்களுக்குத் தெரியும். நான் யார் என்பதை விளக்கமாகத் தெரிவிக்கின்றேன்.

முன்னொரு காலத்தில் அருளே வடிவமான ஜினதேவர் தோன்றினர். பல துன்பங்களுக்கும் தீய செயல்களுக்கும் உரியதாய்ப் பல மதங்கள் ஏற்பட்டிருந்தன. அவற்றல் கட்டுண்ட மக்கள் பகுத்தறிவின்றிப் பல துன்பங்களில் ஈடுபட்டுப் பெருங்காற்றில் பட்ட துரும்புபோல் சுழன்று தப்பவழி அறியாது வருந்தி இருந்தனர். அங்ஙனம் துன்பத்தில் உழன்று வாழும் மக்களிடம் இரக்கங்கொண்ட ஜினதேவர், மக்கள் இப்பிறவியில் இன்பவாழ்வும் மறுமையில் பேரின்ப நிலையும் பெறுமாறு செய்ய எண்ணங் கொண்டார். அதனல் இட்சுவாகு மரபில் இடபதேவர் என்ற பெயருடன் முதலில் அவதரித்தார். பின்னர் அவர் தாம் எண்ணியபடியே உலகத்தை நல்வழிப்படுத்தி மறைந்தருளினர்.

அதன்பிறகு பல நூற்றுண்டுகளும் சென்றன. இவ்வுலகம் முன்போல் அறநெறி நீங்கி அல்லல் அடைந்து வருந்துவதாயிற்று. அதைக் கண்டு மனம் பொருமல் அக்கருணை மூர்த்தியே இரண்டாம் முறையாக அசிதர் என்ற பெயருடன் தோன்றி உலகை நல்வழிப்படுத்தினர். இவ்வாறு உலகம் அறியாமையால் மயங்கித் துன்புறும்போதெல்லாம் அவர்பலபிறவிகளை எடுத்திருக்கிருர். அவரெடுத்த பிறவி இருபத்து நான்கு. சாம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மப்ரபர், சுபார்சுவர், சந்திரப்பிரபர், புஷ்ப தந்தர், சீதபர், ஸ்ரீயரம்சர், வாசுபூஜ்யர், விமலர், அனந்தர், தரிமர், சாந்தி, குண்டு, ஹரர், மல்லி, முனிசுவாதர், நிமி, நேமி, பார்ச்வ நாதர் என இருபத்து மூன்று அம்சமாக அவதரித்த பின் இருபத்து நான்காவதாக இப்பிறப்பை மேற்கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட நான் உங்கள் பிள்ளையாவது எப்படி ? நான் மேற்கொண்டு வந்த தொண்டைச் செய்ய வேண்டாமா ? இதோ, இப்போதே துறவியாகிப் புறப்பட்டேன். புண்பட்ட இவ்வுலகைப் பரிசுத்த உலகமாக்கப் போகின்றேன். விடை தருவீராக.' என்றுர்.

## 7. திருமணத்திற்கு வற்புறுத்தல்

பிள்ளை சொல்லிய பெருமொழிகளை எல்லாம் பெற்றேர் கேட்டனர். பெரிதும் வருந்தினர். பழுக்கக் காய்ச்சின இரும்பு செவியில் நுழைந்ததுபோல் இருந்தது. சிறிது நேரத்தில் அவர்களுக்கு ஏற்பட்ட துயரத்தால் உயிர் துடித்து மதிமயங்கி மூர்ச்சை அடைந்தனர். குமாரரைக் கட்டி அணைத்துக் கொண்டனர். " எமது அன்பே, அருமை மகனே, என்னென்னவோ சொல்லுகிருய் ; தெய்வீக புருஷன் ஆனாலும், உலகம் இன்று உன்னை

எங்கள் பிள்ளை என்றுதான் சொல்லும். வேறு சொல்லுமோ? நீ என்ன சொன்னாலும், நாங்களும் உன்னை எங்கள் பிள்ளை என்றுதான் கொண்டாடுவோம். அன்பு செலுத்துவோம். இங்கிருந்து உன்னை வேறெங்கும் செல்ல விடமாட்டோம். பெற்றோர் மொழியைக் கடந்து நடவாதே. அறிவு நிறைந்த உனக்கு அழகு எது என்பதைச் சொல்லவும் வேண்டுமா? "தாய் சொற்சிறந்த வாசகமில்லை." "தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை." அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ற முதுமொழிகளை நீ அறிந்ததில்லையா? நாங்கள் கூறுவதை மறுத்துவிட்டு எங்களைப் பிரிந்து செல்லத் துணியலாமா? துறவியாவதற்குரிய வயது உனக்கில்லை. அது நியாயமும் ஆகாது. எங்கள் மனம் நீ சொல்லியவைகளைக் கேட்டதும் கொதித்துத் தவிக்கிறது. பெற்றோர் மனக் கொதிப்புச் சும்மா போய்விடும் என்று எண்ணாதே

ஆகையால், மகனே, நீ உலகை நல்வழிப்படுத்த வந்தவன் ஆயினும், அரச பதவியில் இருந்தவாறே செய்யலாம். மூப்பு அடைந்துள்ள எங்களைக் காப்பாற்றுதலே உனது முக்கியமான கடமையாகும். முதல் கடமையும் ஆகும். அருமை மணியே, இனி நீ துறத்தல் என்னும் நினைவைக் கனவிலும் கருதாதே. நீ துறப்பாயானால் எங்கள் உயிர் இவ்வுடலைத் துறந்துவிடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இஃது உறுதி. ஆகையால், நீ எங்கள் விருப்பப்படி ஒரு கன்னிகையைத் திருமணம் புரிந்துகொண்டு இல்லறத்தை நடத்துக. அதுவே நல்லறமாகும். அரசாட்சியில் உன் தமயனுக்கு உற்ற துணையாய் இருந்து வருவாயாக. எங்களுக்குப் பிற்காலத்தில் நீ துறவை மேற்கொள்ள விரும்பினால் செய்க. எங்களைப் புத்து என்னும் நரகத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்" என்று பலவாறு கூறினர்.

# 8. திருமணம்

முதியோர் மனம் வருந்தி இவ்வாறு வற்புறுத்திக் கூறியவைகளை வர்த்தமானர் கேட்டு மனம் மாறினார். "உலகத்தாருடைய துன்பத்தைப் போக்கவந்த ஒருவர் பெற்றோர்க்குத் துன்பத்தைக் கொடுப்பது ஆகுமா? உலகத்தார்க்கு உண்டாகும் துன்பத்தை ஒழிப்பதை இவர்களின் பிற்காலத்தில் பார்த்துக்கொள்ள வேண்டும்." என்று தீர்மானித்துக்கொண்டார். பிறகு பெற்றோரை நோக்கி, "உங்கள் ஆயுள்வரை உங்களை விட்டுப் பிரியேன். நீங்கள் கூறிய நெறியில் நடப்பேன். துக்கம் நீங்கிச் சுகம் பெறுக" என்று கூறினார்.

அது கேட்ட பெற்றோர் ஆனந்தக்கடலில் ஆழ்வார் ஆயினர். உடனே, திருமணம் செய்விக்கத்தக்க ஏற்பாடுகளைச் செய்தனர். தம் குலத்திற்கு ஒத்த அரச குடும்பத்தில் பிறந்த யசோதை என்ற அழகிய கன்னியை நல்லதொரு நாளில் திருமணம் செய்து வைத்தனர். எல்லோரும் மனம் மகிழ்ந்தனர். ஆனால், வர்த்தமானர் உள்ளமட்டும், திருமண நேரத்திலும் மக்கள் படும் துயரத்தை நினைத்து நினைத்து வருந்தியது. அப்பொழுது நிகழ்ந்த மேள ஒலி, ஆடல்பாடல் ஓசை ஒன்றிலும் அவர் மனம் சென்று பதியவே இல்லை. ஆனால், வெளியார்க்குத் திருமணத்தில் மிக்க மகிழ்ந்ததுபோல் காணப்பட்டார். குடக் கூத்தாடியின் மனம் தலைமேல் உள்ள கும்பத்தின்மேலன்றி முன்னே உள்ள கொட்டு முழக்கின்மேல் செல்லுமா?

ஆனாலும், வர்த்தமானர் திருமணம் நிறைவேறியதும் இல்லறத்தை இனிமையாய் நடத்தினார். இவ்வாறு ஆண்டு சில சென்றன. அவர்களுக்கு ஒரு நன்னாளில் ஒரு பெண் மகவும் பிறந்தது. அக்குழந்தைக்குப் பிரியதரிசனை என்று பெயரிட்டு அருமைபாராட்டி வளர்க்கலாயினர்.

# 9. துறவு

ஆண்டு பல சென்றன பெற்றோர் இருவரும் ஒருவர் பின் ஒருவராகப் பரலோகம் சென்றனர். வர்த்தமானர் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் தம் முன்னோனுடன் இருந்து நிறைவேற்றினார் அதன் பிறகு ஓராண்டு தமையனாருக்குப் பலவகையில் உதவி செய்துகொண்டு தங்கி இருந்தார். இவ்வாறு இருக்கும் போது ஒருநாள் அவர் தாம் வந்த காரியத்தை நிறைவேற்ற வேண்டுமே என்று எண்ணினார் அதனால் அவர் அப் போதே ஓர் ஒதுக்கிடத்தைக் கண்டார். சிறிது நேரம் அங்கே நிஷ்டைகூடி இருந்தார். அப்போது அவர்க்கு ஆயுட்காலம் எழுபத்திரண்டு ஆண்டு என்றும் அதில் அரைப்பாகம் சென்றது என்றும் இனிக் கணப்பொழுதும் வீணாக்கக் கூடாது என்றும் துறவறத்தில் விரைந்து நுழைதல் வேண்டும் என்றும் கண்டுகொண்டார்.

அதனால் உடனே, அவர் தம் முன்னோன் ஆகிய நந்தி வர்த்தனரிடம் சென்று வணங்கி, "சந்நியாசியாகி உல கத்தை நல்வழிப்படுத்த இப்போதே வெளியேற நினைக் கின்றேன். பெற்றோரிடம் இது சம்பந்தமாய் முன்னரே உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டேன். தங்கள் உடன் பாட்டையும் இப்போது எதிர்பார்க்கிறேன்" எனக் கூறினார்.

அதுகேட்ட நந்திவர்த்தனர் தம்பியினுடைய கைகள் இரண்டையும் பற்றிக்கொண்டு, 'தம்பி வர்த்தமானா, பெற் றோரை இழந்து பெருந்துன்பம் அடைந்தேன். துன்பக் கடலில் துரும்புபோல் தத்தளிக்கும் நேரத்தில் நீயும் என்னை விட்டு நீங்குவதாகச் சொல்லுகிறாய்; இப் பிரிவுத் துயரை நான் எங்ஙனம் பொறுத்திருப்பேன்? ஆபத்துக்

காலத்தில் எனக்கு உதவுவார் யார்? ஆயிரம் ஆயிரமாகக் குடிமக்கள் இருந்தாலும், உன்னைப்போன்று உதவுவாரோ? தனிமரம் தோப்பு ஆகுமா? தனித்திருந்து நான் எவ்வாறு அரசாட்சியை இனிது நடத்தப் போகின்றேன்? இவற்றைக் கவனிப்பாய் அருமைத் தம்பீ, என்னுடன் இன்னும் சிலகாலம் தங்கி அரச செல்வத்தை அனுபவிப்பாயாக.

உடுக்க உடையும் உண்ணச் சோறும் இல்லாமல் ஊர் ஊராய் அலையும் வாழ்க்கையை விரும்பாதே. இழிந்த குடிசைகள் தோறும் பிச்சை எடுத்துச் சாப்பிட்டுப் படுக்க இடமின்றி வருந்தும் ஏழைகள் நிலையை நீ அனுபவிக்காதே இவ்வாறு நீ இருப்பதைக் கேட்டால் என் மனம் வருந்தும். இவற்றையெல்லாம் யோசித்துச் செய்" என்று கூறினார்.

அதைக் கேட்ட வர்த்தமானர், "உலகத்தை நல்வழியில் நடத்த வேண்டியது அரசனது கடமை. ஆதலால், அதனையே நான் செய்யப் புறப்படுகிறேன். உலகத்தார்க்கு உதவியாக ஒன்றைச் செய்யும்போது அளவுகடந்த துன்பங்கள் வந்து சேரும். அவைகளைப் பொறுத்துக் கொண்டு எடுத்த வேலையை நிறைவேற்ற வேண்டும் மேலும், துறவிகள் துன்பத்தையும் இன்பத்தையும் சமமாக எண்ணவேண்டும். அறியாமையால் ஏன் வீணாக மனத்தைப் புண் படுத்திக்கொள்ளல் வேண்டும்? என்னைத் தடுக்க வேண்டாம்" என்று வர்த்தமானர் கூறி விடை பெற்றுக் கொண்டார்.

அன்று இரவு வந்தது. அவர் மனைவி வர்த்தமானரின் கால்களைக் கண்ணீரால் கழுவினார். "ஆருயிர்த் துணைவரே, என்னை விட்டு நீங்கவோ துணிந்தீர். உம்மைப் பிரிந்து

உயிர் வாழேன். துறவியாகிப் பிச்சை யேற்று உண்ணு வதைக் காணவா நான் இங்கு உயிருடன் வாழ வேண்டும்? என்னைத் தனித்திருக்க விட்டுத் தாங்கள் வெளிச் செல்வது நியாயமாகாது. அப்படி விரும்பினுல் என்னை உடன் அழைத்துச் செல்லுங்கள். இல்லையானுல், “நீ வானகம் நோக்கிச் செல்க” என்று “உமது திருவாயால் உத்தரவு கொடுங்கள்” என்று பலவாறு கூறி வருந்தினுள்.

மனைவியின் வார்த்தைகளைக் கேட்டு வர்த்தமானர் பல இன்னுரைகளால் சமாதானப் படுத்திவிட்டுப் படுக்கைக் குச் சென்று உறங்கினுர். அப்போது தேவதூதர் சிலர் வர்த்தமானர் கனவில் தோன்றினர். “வர்த்தமானரே, உன்னை நீ உணர்ந்திருக்கிருய். இதற்காக வந்திருக்கிறோம் என்பதை அறிந்துள்ளாய்; உலகில் உயிர்கள் படும் துன் பத்தைக் கண்டிருக்கிருய்; உமது ஆயுட்காலத்தில் பாதியை வீணுக்கினுய், இரக்க வடிவான நீர் இவ்வாறு இருத்தல் ஆகுமா? எழுந்திரும், எழுந்திரும்; அவதாரம் செய்தது எதன்பொருட்டு என்பதை எண்ணிப் பாரும். உலகத் தொண்டில் ஈடுபட இதுவே தக்க நேரம். எழும், எழும்” என்று கூறி மறைந்தார்கள்.

# 10. இயற்கைத் தோற்றமும் இன்பத் துறவும்

உடனே, கண்ணை விழித்துப் பார்த்தார் வர்த்தமானர். தேவ தூதரின் அறிவிப்பை உணர்ந்தார். அப்பொழுதே வெளிப்பட முனைந்தார். உழைத்து உலகத்தை நன் னெறிப்படுத்தும் எண்ணம் முன்னிலும் பதின்மடங்கு

மிருந்து முற்றிவிட்டது. தூரத்தற்கு விடியற்காலத்தை எதிர்பார்த்தார். இரவின் நான்காவது யாமத்திற் பாதி சென்றது. கோழிகளெல்லாம் வர்த்தமானர் வெளிப் பாட்டை இறகால் வயிற்றிலடித்துக் கூவுதரலால் உலகந் தாருக்கு அறிவிக்கத் தொடங்கின. "வெளிப்படப் போகின்ற கருணைவள்ளல், 'என்னைக்கா என்னைக்கா' என்னும் பொருள் படும்படி ஒவ்வொரு காகமும் கத்தத் தொடங்கியது. நமது தீர்த்தங்கரர் வெளிப்பட்டார். அவர் வல்லமையால் பிற சமயவாதிகளெல்லாம் மறைந்தனர் என்பதைச் சூரியத் தோற்றமும் அதன் கிரணத்தால் நக்ஷத் திரக் கூட்டங்கள் மறைந்தும் அறிவித்தன சூரியன் தோன்றியஉடன் உலகை மூடியிருந்த இருள் நீங்கியது. அது மக்கள் உள்ளத்தை மூடியிருக்கும் அஞ்ஞான இருளை இனி வரவிருக்கும் இறைவர் நீக்குவார். தடாகங்களி லுள்ள தாமரை மலர்களெல்லாம் வர்த்தமானரை அழைப் பதுபோல் மலர்ந்தன. கதிரவனைக் கண்ட அல்லி மலர்கள் கும்பலாயின. மற்றைப் பறவைகள் எல்லாம் நமது தீர்த் தங்கரர் வருகையை வாழ்த்துவதுபோல் கத்தின. களிப் பன போல் அங்கும் இங்கும் ஓடியாடின.

## 11. வெளியேறலும் பெயர் பெறுதலும்

சூரியன் தோன்றினன். வர்த்தமானர், அரசர், அமைச் சர், பிரபுக்கள், சுற்றத்தார் மற்றுமுள்ளார் பலரும் கூடி அரச சபை மண்டபத்திற்குச் சென்றனர். ஆசனத்தமர்ந் தார். அங்கிருந்தோர் எல்லோரையும் தமது கருணைக்

கிருப்பிடமாயிருக்கும் திருக்கண்களினால் ஒருமுறை உற்று நோக்கியருளினர். தாம் துறவறம் மேற்கொள்ளப் போவதையும் அதற்குரிய காரணத்தையும் அங்கு இருப்போர் அனைவருக்கும் நன்கு விளங்கும்படி விரித்துரைத்தார். அப்பால் அவர் தாம் அணிந்துகொண்டிருந்த ஆபரணங்களை எல்லாம் ஒவ்வொன்றாய்க் கழற்றினர். அண்டையிலுள்ள சுற்றத்தார் பலருக்கும் அவற்றை வழங்கினர். நிதிகளை எல்லாம் ஏழைகளுக்கு இரண்டு கைகளாலும் வாரி வாரி இறைத்தார். உடுத்தியிருந்த பொன்னிழை கோத்தப் பட்டாடைகளை அவிழ்த்து அப்புறப்படுத்தினர். சாதாரண உடையை அரையிற் சுற்றிக்கொண்டார். ஆசனத்தை விட்டெழுந்து நடந்து வெளியேறினர். அப்போது அங்கிருந்தோர் பலர் வணங்கி நின்றனர். அவர் பிரிவுக் காற்றாது அழுதார்கள். ஆசாரவாசலில் வந்தார். அங்கே அலங்கரித்து வைக்கப்பட்டிருந்த பொன் பல்லக்கின்மேல் எழுந்தருளினர். அப்பல்லக்கு அறிஞர் பலராலும் தாங்கப் பெற்றது. அடுத்துள்ள ஓர் ஆரணியத்திற்கு அவரைக் கொண்டு போய்ச் சேர்த்தனர். பல்லக்கிலிருந்து இறங்கிய வர்த்தமானர், அருகே இருந்த அசோக மரத்தடியில் அதிக சுத்தமும், அழகும், உயர்வும் அமைந்து விளங்கிக்கொண்டிருந்த கற்பாறையின்மேல் அமர்ந்தருளினர். சிறிது நேரம் நிஷ்டையிலிருந்தார். அந்த நாள் மார்கழித் திங்கள், அமர பக்ஷம் தசமி திதியாயிருந்தது. கற்றறிந்த மேதாவிகளையும், மகாயோகிகளையுங்கூட மயக்கித் தன் வசப்படுத்தவல்ல பேர் ஆசை என்னும் பேயைத் தன்னை அணுகாதபடி அகற்றிவிடும் ஒரு பேராற்றல் இவரிடம் உண்மையில் இருக்கக் கண்டனர், அதனால், உலகத்தார் அன்று முதல் இவரை **மகாவீரர்** என அழைக்கத் தொடங்கினர்.

வர்த்தமானர் துறவியாதற்குமுன் சில நாட்கள் உண்ணா நோன்பினை மேற்கொண்டிருந்தனரெனவும் அப்

போது இந்திரன் தோன்றி ஓர் உயர்ந்த ஆடையை அவருக்கு வழங்கினனெனவும் அதனை அணிந்து புறப்பட்டாரெனவுங் கூறுவர்.

# 12. இடைவேளையும் இன்பக்காட்சியும்

நடுப்பகற் பொழுது வந்தது. கதிரவன் வானத்தில் உச்சியில் இருந்தான், தனது வெப்பமான கதிர்களை விடுத்தான். அளவு கடந்த கொடையால் பல குடும்பங்களைப் பரிபாலித்து வந்த செல்வர் ஒருவர் கால நிலையால் செல்வம் குறையத் தன் குடும்பத்தை மட்டும் காப்பது போல், வெகுதூரம் வரையில் பல உயிர்களுக்கும் நிழலளித்து உதவிய மரங்களெல்லாம் தன்னடி அளவு மட்டும் நிழல் செய்து நின்றன.

செழிப்பு மிக்க நாட்டுக் குடிமக்களைப்போல் முத்துப் போன்ற பனிநீர்த் துளிகளை முனையில் தூங்கவிட்டுக் கொண்டு செழித்து விளங்கிய தளிரும், பூங்கொத்துக்களும் பஞ்சம் மிகுந்திருக்கும் நாட்டு மக்களைப்போல் பொலிவிழந்து சோர்ந்து விளங்கின. இரப்பவன் ஒருவன் தன் பசி பொறுக்காமல் யாதொன்றும் இல்லாதவன் வீட்டிலும் யாசிக்கப் புகுவதுபோல வாடிக் கவிழ்ந்து கொண்டிருந்த மலர்களிலும் வண்டுக் கூட்டங்கள் பாடிப் புகுந்துகொண்டிருந்தன. அப்பாடல்களைக் கேட்டுத் தம் தாயின் வயிற்றுக் கட்டை விடுத்த குரங்குக் குட்டிகள் கிளைகளில் தங்கி உறங்கின. ஒருவர்க் கொருவர் உதவிசெய்து இரு

வரும் சுகமுறுதல்போல் வானரங்கள் ஒன்றுக்கொன்று பேன் பார்த்து உடல் அரிப்பைத் தீர்த்துக் கொண்டன. கொடையாளி பஞ்சத்திலும் வந்தடைந்தோரை இருப்பிடம் தந்து இயன்றவரை காப்பதுபோல மரங்கள் கிளைகளில் வரும் புள்ளினங்களுக்கு இடங்கொடுத்து நறுங்கனிகளால் ஆனவரை விருந்தளித்துக் கொண்டிருந்தன.

சோகத்தால் மனம் அழிந்திருந்தாலும் வாய்ப் பழக்கத்தால் பாடிக்கொண்டிருக்கும் பாண்புலவரைப்போல் சில பறவைகள் தாகத்தால் நாவறண்டிருந்தாலும் பழக்கத்தால் வாயைத் திறந்தும் திறவாமலும் பாடிக்கொண்டிருந்தன. மேய்ப்பவனால் செலுத்தப்பட்ட ஆடுமாடுகள் குறைந்த நிழலில் நெருங்கி நின்றன. அங்கே அசைபோட்டுக் கொண்டிருந்தது ஒரு சிறிய வீட்டில் பெருகிய குடும்பம் வாழ்வதை ஒத்திருந்தது. பொய்யான இவ்வுலகத்தை மெய்யான பொருளென்று நம்பி ஏங்கி உழைத்து அழிவார்போலச் சில காட்டு விலங்குகள் கானல் நீரை நீரோட்டமென்று கருதி அங்குமிங்கும் அலைந்து கால் ஓயப் பெற்றன.

ாள நீர் நிலைகள் எல்லாம் உள்ளிடம் குளிர்ந்தும் மேற்பாகம் சூடாயும் இருந்தது. அஃது ஒருவனை நல்வழிப்படுத்த உள்ளத்தில் நல்லெண்ணமும் வெளியே கொடிய சொற்களும் கொண்டிருக்கும் நல்லோரை ஒத்து விளங்கியது. நீரின் மேற்பரப்புக் கொதிக்கவே அங்கே தங்காது அடுத்துள்ள மரக்கிளை அலங்கரித்துக் கொண்டிருக்கும் நீர் வாழ் பறவைகள் தமக்கு இவ்வாறு இடுக்கண் இழைத்த தினகரனைத் திட்டுவது போலக் கத்தின. அன்னியர் ஆட்சிக்குட்பட்ட கன்னியர் போல ஆம்பலும் நீலமும் சாம்பிக் கூம்பித் தலைகவிழ்ந்தன. எவ்வளவு தண்டித்தாலும் கொண்டானை அன்றி வேறொன்றை

யும் உணராக் குலமகள்போல் தாமரை மலர்கள் தம்மைத் தவிக்கச் செய்து கொண்டிருக்கும் சூரியனையே நோக்கி நின்றன.

# 13. ஒழுக்கமும் உயர் ஞானமும்

அத்தகைய நேரத்தில் அம்மகா வீரரை அகப்புறப் பற்றுகள் அனைத்தும் அகன்றோடின. நற்குணம் பலவும் அவரிடம் வந்து குவிந்தன. இத்தகைய வீரர் நாள்தோறும் விடியற் காலையில் எழுந்து தமக்கு முன்னே அவதரித் தருளிய தீர்த்தங்கரரை எண்ணி வழிபடுவார். அவர்க ளுடைய அழகிய வரலாறுகளைப் பாராயணம் செய்வார் அவர்கள் நிலைநாட்டிய சமய நூல்களை மனனம் பண்ணு வார். தாம் மேலே செய்ய வேண்டிய காரியங்களைக் குறித்துச் சிந்தனை செய்வார். சிறிது நேரம் தியானத்தில் இருப்பார். மத்தியான வேளையானதும் உடலிலும் பற் களின் இடுக்குகளிலும் உள்ள சிறுசிறு பூச்சிகளாகிய உயிர்களுக்கு வருத்தம் உண்டாகக் கூடாதென்று நீராடு வதையும், தந்தசுத்தி செய்தலையும் நீக்கிக் கைகால் முகங் களை மட்டும் சுத்தம் செய்து கொள்வார்.

பசி எடுத்தால் கிடைத்த உணவை நின்றுகொண்டே அரை வயிறு அருந்துவார். மாலையில் அரிய சொற்பொழி வாற்றுவார். கூடி இருப்பவர் மனம் உரை வளத்தால் கரைந்து இளகும். அருளுடைமை சமய நுணுக்கம், நல் ஒழுக்கம் முதலிய பொருள்களைக் குறித்துப் பேசுவார். இராக் காலத்தில் நீண்ட நேரம் யோகத்தில் இருப்பார் அவர் கண்ணயர்ந்து உறங்கும் நேரம் இரண்டொரு நாழிகைகளே. இப்படியே இவர் உடலுக்கும் உயிருக்கும்

வரக்கூடிய பலவகைத் துன்பங்களேயும் சகித்துக்கொண்டு மிகப் பொறுமையுடையவராய்க் காலத்தைக் கழித்து வந்தார்.

ஒருநாள் சோமதத்தன் என்னும் ஓர் அந்தணன் இவரையடுத்து ஏதேனும் தானங் கொடுக்க வேண்டு மென்று வேண்டினுன் இவரிடமோ யாதுமில்லே. இந்திரன் கொடுத்த ஆடையிற் பாதியைக் கிழித்துக் கொடுத்தார். அவனே பிறகு வந்து மற்றைப் பாதியை யுங் களவு செய்துகொண்டு சென்ருன். அது முதல் இவர் ஆடையற்றவராகவே சுற்றித் திரிந்தார்.

பல மலேகளிலும் காடுகளிலும் சென்று கடுந்தவங்கள் பல இயற்றினர். மௌன விரதத்தைக் கையாண்டு வந் தார். ஆங்காங்குப் பிரயாணங்கள் செய்வார். 'இவ்வாறு ஆண்டு பதினேந்து கழிந்தன. அந்தக் காலத்திலே அவர் உயர்ந்த ஞானம் அடைந்தார். சகல மொழிகளும் சித்தி களும் அவருக்குக் கைவந்தன.

# 14. சுற்றுப்பிரயாணமும் சீடரைப்பெறுதலும்

இங்ஙனம் பரிசுத்தம் நிறைந்த ஞானம் பெற்ருர். தடையற்ற வாக்குச் சாதுரியத்தில் சிறந்து விளங்கினுர். தோற்றத்திலும், கலே அறிவிலும் உயர்ந்தார். உலகத்தை நல்வழிப் படுத்தும் அவாவிலும் ஒப்புயர்வற்று விளங்கினுர். அதனுல், தாம் அனுபவித்துக் கொண்டிருக்கும் ஞானனந்

தத்தை உலகமக்களும் அனுபவித்துய்வுபெற வேண்டு மென்ற அளவு கடந்த கருணையினால் மதப்பிரசார நிமித்தம் தேசங்கள் தோறும் யாத்திரை செய்யத் தொடங்கினார். அவர் முதலாவதாகக் கங்கை, யமுனை முதலான நதி தீரங் களிலுள்ள பட்டணங்களுக்குச் சென்றார். சில நகரங் களுக்குச் சென்று தமது மதக் கொள்கைகளைப்பற்றிப் பிரசங்கித்தார். சிறிது காலம் சென்ற பின் அந்த ஆரிய வர்த்த பூமி முழுவதிலும் அவர் ஒரு முறை சுற்றுப் பிரயா ணம் செய்தார். அதனால் இவருடைய புகழ் அங்கே எல்லா இடங்களிலும் சென்று பரவிற்று.

இப்படியிருக்கும் பொழுது அந் நாட்டில் கௌதம இந்திரபூதி என்ற ஓர் அந்தணர் இருந்தார். அவர் சகல கலாவல்லவர். பல மதங்களின் தத்துவங்களையும் நன்கறிந் தவர். வாதத்தில் எதிர்த்த பண்டிதர் பலரையும் தோல்வி யுறச் செய்தவர். சீடர்கள் பலர் தம்மைப் பின் தொடர்ந்து வரப் புகழைக் கூறிப் பலர் முன்னே செல்ல, எவர்க்கும் வணங்காமல் கல்விச் செருக்கால் தலை நிமிர்ந்து சிறந்த பட்டணங்கள் தோறும் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார்.

இவ்வாறு இவர் இருத்தலைக் கேள்விப்பட்டார் மகா வீரர். "ஓகோ, கேவலம் கல்விச் செருக்கால் ஒருவன் தன்னுடைய பிறப்பை வீணாக்கிக் கொள்கிறானே அந்தோ, பரிதாபம்! அவனை நாமே நல்வழிப் படுத்தல் வேண்டும்" எனத் திருவுளம் கொண்டார். அண்டையிலுள்ளாரால் அந்த இந்திர பூதியை அழைப்பித்தார் பூதியும் வாதப் போர் விருந்து வலியக் கிடைப்பதற்கு மகிழ்ச்சியுற்றார். மகாவீரர் இருக்குமிடத்தை அணுகினார். அங்கே ஓர் ஆசனத்தின்மேல் எழுந்தருளியிருக்கும் குருவாகிய மகா வீரரைக் கண்டார். அருள் என்னும் ஒளியால் விளங்கிக் கொண்டிருக்கும் அவரது திருமுகத்திலும் சொல் அமுத மாரி சொரிந்து கொண்டிருக்கும் செவ்விய திரு வாயினிடத்

திலும், திரு மார்பிடத்திலும் தமது கண்களைப் பதிய வைத்தார். சிறிது நேரம் பிரமித்து நின்றார். பிறகு அவர், அவருடைய கம்பீரமான தோற்றத்தைக் கண்ணுற்றுக் கொஞ்சம் அச்சம் கொண்டு அகல நின்றுகொண்டிருந்தார். இப்படி நிற்பவரை மகாவீரர் தமது அருமைத் திருவாயால் அருகி லழைத்திருக்கச் சொல்லி, "கலைகளைக் கற்றறிஞராய பயனிது" வென விரித்துரைத்துக்கொண்டு வருகையில், இந்திரபூதி செருக்குடன் சில விஷயங்கள் ஏற்றதன்றென சொற்போர் செய்யத் தொடங்கினர். தொடங்கவே அவ்விருவர்க்கும் சொற்போர் வெகு பலமாய் நடக்கத் தொடங்கியது. மூன்று முகூர்த்தம் வரை அந்தச் சொற்போர் வெகு நெருக்கமாயிருந்தது. முடிவில் கௌதம இந்திர பூதி தோல்வியுற்றுச் சீடவர்க்கத்துடன் அவரைச் சரணடைந்து அவருக்குச் சீடனுனர். மகாவீரரும் பூதியோடு மற்றுமுள்ளவருக்கும் ஆசிகூறித் தமது கொள்கைகளை எல்லாம் அவருக்கு உபதேசித்துத் தம்முடைய பக்கத்திலேயே இருக்கும்படி ஆணை செய்தார். அப்படியே அவர்களுமிருந்து நாள்தோறும் அந்தக் குருமூர்த்தியால் செய்யப்பட்ட பிரசங்க அமிர்தத்தைப் பானம்செய்து கொண்டிருந்தனர். பிறகு மகாவீரர் அந்தக் கௌதம இந்திர பூதியையே தம் சீடவர்க்கங்களுக்குத் தலைவராக நியமித்தருளினர்.

## 15. பாடலிபுரத்தில் அறிவுரை

இப்படி யிருக்கும் அக்காலத்தில் பாடலிபுரமென்னும் பட்டணத்திலிருந்து அரசன் ஒருவன் ஆட்சி செய்து வந்தான். அவன் மிகுந்த கல்வி கேள்விகளிற் சிறந்தவன்.

அவன் மகாவீரர் ஞான வைராக்கிய செல்வராய் விளங்கு தலைக் கேள்விப்பட்டான். அவரால் ஞானோபதேசம் பெறக் கருதினான் அதனால், அவன் சென்று அவரை வணங்கினான். "தன் நகர்க்கு எழுந்தருளித் தன்னையும் தன் குடிமக்களையும் நல்வழிப் படுத்தியருளல் வேண்டு" மென்று வேண்டினான் கருணை வள்ளலாகிய அவரும் அவ்வாறே செய்வதாய் ஒப்புக்கொண்டார். தாம் அங்கு வருவதற்குரிய காலத்தையும் குறிப்பிட்டு அனுப்பினார். உடனே அவ் வேந்தனும் அவரை வணங்கி விடைபெற்றுத் தன் நகர் சேர்ந்தான்.

அரண்மனைக்கு அடுத்த ஒரு மைதானத்தில் மிகப் புது மையான வேலைப்பாடுகளமைந்த பெரிய ஓர் சங்க மண்ட பத்தை அதி விரைவில் அமைத்தான். அதனுள் பலவகை யான எண்ணிறந்த ஆதனங்களை அமைத்தான். ஆசாரிய ராகிய மகாவீரர் வீற்றிருத்தற்கு மிகச் சிறந்த ஓர் அரி யணையை நவரத்னங்களால் குயிற்று வித்தான், அதனை முத்து மாலைகளால் அலங்கரித்தான். பன்னிறமுள்ள கொடிகளாலும் தோரணங்களாலும் அணி செய்யப்பட் டது. அம்மண்டபம் தேவலோகம் போல் விளங்கியது. அப்பால் அப்பாடலிபுர வேந்தன் தன் நாட்டிலும் பிற நாடு களிலுமுள்ள அரசர்கள்,மந்திரிகள்,பிரதானிகள், புலவர்கள், செல்வர்கள், தொழிலாளிகள், பிறவு முள்ளவர்களையெல் லாம் அழைத்து வரும்படி தூதர்களைப் போக்கினான் அழைக்கப்பெற்ற யாவரும் அச்சங்க மண்டபத்தில் வந்து கூடலாயினர். மகாவீரர் குறிப்பிட்ட காலத்தில் அப் பட்டணத்திற்கு வந்தார். அவரை அங்குள்ள தலைவர்கள் எல்லோரும் வாத்தியங்கள் முழங்க எதிர்சென்றழைத்து வந்து சங்க மண்டபத்திலுள்ள இரத்ன சிம்மாதனத்தில்

எழுந்தருளச் செய்தார். பிறகு அங்கு நின்றுகொண் டிருந்த எல்லோரும் சந்தோஷ ஆரவாரத்தால் அவ்விறை வரை வணங்கித் தங்கள் தங்களுக்குத் தகுதியான இருக்கை யில் அமர்ந்தனர். அப்பால் மகாவீரர் அவர்கள் யாவருக் கும் ஆசி கூறித் தமது மதக் கோட்பாடுகளை விரிவாகப் பிரசங்கிக்கத் தொடங்கினர்.

## 16. ஞானச் சொற்பொழிவு

எம் அருமை மெய்யன்பர்களே, தோழர்களே, இப் போது கூறப்போகிற விளக்கவுரை மிகப் பழைமை யானது. இன்று நேற்று ஏற்பட்டதன்று. முன்னோர் பலரால் மேற்கொள்ளப்பட்டது. பல தீர்த்தங்கரரால் உபதேசிக்கப்பட்டது. பல நாட்டாரும் அன்போடு ஏற்று நடந்தது. இத்தகைய நமது அருமையான மதம் இடைக்காலத்தில் எழுந்த கெட்ட சொற்களுக் கெல்லாம் இருப்பிடமாயிருந்த சில மதாசிரியர்களால் பெரிதும் ஒளி மங்கிப்போயிற்று. அம் மங்குதலையாகிய அழுக்கைப் போக்கிப் பரிசுத்தப்படுத்தி உலகத்தார் எல்லோருக்கும் நேர்முகமாய் இருந்து உபதேசித்து யாவரையும் நல்வழிப் படுத்தவே எளியேன் இங்கு தோன்றினேன்.

யாம் இங்கே விரித்துரைக்கப் போவது ஒப்புயர்வற்ற மதத்தைப் பற்றியேயாகும். வெற்றுரையே பற்றிப் படர்ந்து பெருகி மறை யென்றொரு பெயரும் படைத்து சிலர் மறைமுகமாகப் பலரும் மயங்க வாய்ப்பந்தல் போட்டுக் கொண்டிருக்கின்றனர். இத்தகைய சில வைதிக மதம் போன்றதன்று இது. இதில், "ஒன்று இருக்கின்றது; இருக்

கிறது" என்று சிலரை ஏமாற்றிவிடுகின்றனர். முடிவில் இலவு காத்த கிளி போல் ஆக்கும் சமயம் அல்ல. வினை வழியே எல்லாம் நிகழ்வனவாம். ஆதலின், நம்மால் யாது செய்ய முடியுமென்று வீண்பழியை விதியின்மேல் ஏற்றி விரும்பியபடி எல்லாம் நடப்பாருடைய நடத்தையைச் சேர்ந்ததன்று. விதி ஏது? கதி யேது? அறம் ஏது? மறமேது? சுவர்க்கமேது? நரகமேது? எல்லாம் வீண் பொய். உள்ளதைக் கொண்டு உண்டு உடுத்துச் சுகமாகக் காலம் தள்ளுவது துறக்கம். "இறப்பதே முத்தி; இல்லாமை யாலும் நோயாலும் இவ்வுலகத்தில் வருந்துவதே நரகம்" என்று பிதற்றுவோர் சமயமுமல்ல. அருள் இல்லாமல் வதைப்பதற்குரிய ஆயுதங்களைக் கையிலேந்திய தெய்வங் களைத் தலைமையாகக் கொண்டிருக்கும் சமயமின்று. யாகத் தின்மேலும் பிசாசுகளின் தலையிலும் பழிகளைச் சுமத்திக் கருணையின்றிப் பிராணிகளை வதைத்துத் தின்னத் தூண்டு மோர் நெறியில் சேர்ந்ததுமல்ல. அந்தப் பரம்பரை என் னும் அறியாமையில் முட்டி மோதித்திரிய விரும்புவது மல்ல. மற்றும் இவைபோன்ற பிறவுமல்ல. நிருவாண நிலைக்கு நேர்வழி காட்டுவதாகிய அமல மயமான சமண மதமேயாகும்.

இனி, நான் கூறப்போகும் தூய சமயத்தைப் பற்றிய வைகளைக் காற்றில் விடாதீர்கள். மயான புராண வைராக் கியராகாதீர்கள். கருத்திற் பதியக் கேட்டு அவற்றைக் கடைப்பிடித் தொழுகுங்கள்.

அன்பர்களே, பண்டை வினையின் பயனாலே நீங்கள் இந்த நிலையில் இருக்கின்றீர்கள். இனி, உங்களுக்கு வரும் சுகதுக்கங்களுக்குக் காரணம் நீங்களே ஆவீர்கள். மற்ற வர்களை நோவதில் பயனில்லை. எத்தகைய உயிரும் தீவினை

மிகுதியால் நரகத்தையும், நல்வினையின் பெருக்கால் சுவர்க்கத்தையும் அடைவது ஒருதலை மேலும் சீவன் பாவத்தின் மிகுதியால் புழுப் பூச்சி, பறவை, விலங்கு முதலிய பிறவிகளையும், பாவமும் புண்ணியமும் ஒத்த காலத்தில் மக்கட் பிறவியும் அடையும் உமக்குரிய நல்வினையைத் தீவினையாக்கவும் தீவினையை நல்வினை ஆக்கவும் யாராலும் முடியாது. எதிரே வருபவைகளை விலக்கவும், வராதவைகளைக் கூட்டிவைக்கவும், எத்தகைய கடவுளாலும் ஆகாது. அவரால் நமக்கு யாதொரு பயனும் "இல்லை என்று தெளிதல் வேண்டும். ஆனால், நல்ல காரியங்கள் இவை எனப்பகுத்து உபதேசித்தருளிய அறநெறியே யாவரும் நடத்தல் வேண்டும். இம்மை மறுமைக்குரிய பலன்கள் அனைத்தையும் பெறுவிக்குமோர் ஆசிரியனையே முதலில் நீங்கள் வணங்கி வழிபட வேண்டும். ஆயினும் ஏற்பட்டதில் எள்ளளவு கூட்டவோ, குறைக்கவோ அக் குருக்களாலு முடியாது என்பதை அறிய வேண்டும். ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய நன்மைகளைத் தாமே தேடிக்கொள்ள வேண்டும். இனி நீ புண்ணியத்தைத் தேடிக்கொள்ளும் காலத்தில் அதனைத் தடுக்குமோர் வினையென்பதில்லவேயில்லை. வேதங்களும், காலமும், உலகும், மன்னுயிர்களும், கன்மமும், தர்மமும் நித்தியமான பொருளென்றறிவீராக.

'தெய்வ மொன்று இருக்கிறதா? இல்லையா?' என்பதைப்பற்றி நீங்கள் விசாரிக்க வேண்டாம். இந்த விசாரணை வெள்ளை வெண்காயத்தில் விதை காண உரித்தவன் கதையாக முடிவதேயன்றி வேறில்லை. இதில் ஈடுபட்டு வாணாளை எல்லாம் வீணாக்கி முடிவில் சூனியமின்றி ஒன்றும் தென்படாதவராய்ச் சோர்ந்தவர் பலராவர். ஐயோ பாவம்! இவர்க ளென்ன செய்வார்கள்! இவர்களைச் சொல்ல என்ன இருக்கிறது! இவர்களை வாழ்க்கிய

நூல்களையும், அந்நூலை இயற்றித்தந்த ஆசிரியர்களையு மல்லவோ நாம் கண்டிக்க வேண்டும். நிர்வாணத்துக்கு வேண்டியதாகிய ஞானமே பெறத்தக்கது நிர்வாணத்துக் காகச் சகலத்தையும் வெறுத்துவிட வேண்டும் ஆன்றோர் கூறியபடி தவ நமல் மன வுறுதியுடன் உடலை வருந்தச் செய்து ஞானத்தை அடைந்தவனே இவ்வுலகத்திற் பிறந்த பயனை அடைந்தவன் ஆவான். அவனே காரியத்தைப் பார்த்தவன். மற்றவர் பிறர்க்கு உழைத்துப் பிறப்பு இறப் புக்களில் சுழன்று துன்பக் கடலில் ததும்புகின்றவராவார். நிர்வாணத்தின் பொருட்டுச் செய்யும் விரத தவயோகம் முதலியவைகளால் உயிர்க்கு இறுதி ஏற்படினும் அது நலம் தருவதேயாகும். நிர்வாண மோட்சம் எவருக்கும் பொது. அதனை விரும்பி உபதேச முறையால் உழைப்பவர் எத்தகைய சாதியாராயினும் எய்துவர்.

அறங்களுள் முதன்மையாவது மற்றைய உயிர்களுக் குத் துன்பம் செய்யாதிருத்தல், பொய் சொல்லாதிருத்தல் என்பனவாகும். அயலார் பொருளை அபகரித்துக்கொள்ள நினைத்தலாகாது. பிறனில் விழையாமை பெரிதும் மேற் கொள்ளத்தக்கது. பொய்ச் சாட்சி சொல்லாதிருத்தலும் அதுபோன்ற மற்றச் செயல்களும் மேற்கூறிய அறத்தோ டொத்தனவாகும்.

**கொல்லாமை**—அறங்கள் பலவற்றுள்ளும் சிறந்தது கொல்லாமையும் புலால் உண்ணாமையும் ஆம். உயிர்க் கொலை செய்வோனிடம் எல்லாத் தீவினைகளும் வந்தடை கின்றன. கொல்லா விரதம் உடையவனை எல்லா அறங் களும் வழிகேட்டு வந்தடைகின்றன. கொல்லுவோன் செய்யும் அறங்களும் விரதங்களும் தவங்களும் பலன் கொடாது பாழ்படும். கொல்லாதவன் செய்யும் சிறிதறமும் பேறறமாகப் பெருகி நற்பயன்களையே நல்கா நிற்கும்.

கொலை செய்யாமையாகிய நன்னெறியே நிர்வாண உலகம் எய்தற்குக் குறுக்குவழி. மாறிமாறிப் பிறத்தற்குப் பயந்து மனையறத்தை நீத்துத் துறவறத்தைக் கைக்கொண்டவருள் ளும் தலைமை யாவார் கொல்லாமை மேற்கொண்டவரே. இவர் வாழ் நாளிடையிற் கூற்றுவனும் குறுக்கிடுவதில்லை.

அன்பர்களே! உயிர்க்கு இறுதிவருவதாயிருந்தாலும் அதனைச் சகித்துக்கொள்ள வேண்டுமேயன்றிப் பிற ஜீவராசிகளுக்கு ஆபத்தை விளைவிக்கவே கூடாது. கோடி பொன் கிடைப்பதாயிருந்தாலும், கொண்ட குறை நோக்காடு தீருறிருந்தாலும், சுவர்க்காதி போகங்களே வாய்ப்பதா யிருந்தாலுமென்லும் ஒருயிரையும் நீங்கள் கொல்லுதல்செய்யலாகாது. வறுமையாலும் பிணியாலும் வருந்திக் கொண்டிருப்பவர் யாவரும் முற் பிறப்பின் கொலைப் பாதகம் செய்தவரென்றே துணிவீராக. உண்மை அறிந்தோர் சித்திரத்து உருவையுங் கூடத் துணிந்தழிப்பதில்லை. உள்ளதை ஒளியாமற் பகுத்தளித்து ஆனவரை உயிர்களைப் பாதுகாப்பவனே உலகமெல்லாம் உச்சிமேல் தாங்கும் உத்தமனாவான். புலால் உண்பதாகக் கனவு காண்பதும் கொடிய பாதகமாகும்.

சகோதரர்களே, நமது உடலில் கண்ணுக்குத் தோன்றுத பல உயிர்கள் பூச்சி வடிவில் வாழ்கின்றன. அதனால், அவைகளுக்கு இடுக்கண் உண்டாகாதபடி உடம்பை நன்றுய்த் தேய்த்துக் குளிக்காமல் இருக்கவேண்டும். உடுக்கும் உடையில் சீலைப்பேன் முதலியன நிறைந்திருக்கும். அதனால், அவ் வுயிர்கள் வருந்த ஆடைகளைத் துவைத்தல் கூடாது. பூச்சிகள் பற்றுதபடி உடைகளைக் கடுக்காய் நீரில் ஊறவைத்து உலர்த்தி உடுத்தலே நலமாகும். துறவிகளுக்குப் பால்போன்ற சிறந்த ஆடை வேறில்லை.

உணவு உண்ணும் நேரம் பகற்பொழுதாக இருத்தல் வேண்டும். இரவாயின், சிறிய எறும்பு கொசு முதலியன

உணவுடன் கலந்து விடக்கூடும். அக்காலத்தில் ஏற்றிக் கொள்ளும் விளக்காலும் பல பிராணிகள் நாசமாகும். உண்ண இருக்கும் இடத்தையும் பிராணிகள் இல்லாதபடி சுத்தம் செய்து விடக்கூடாது. இருந்து உண்ணுதலினும் நின்றுண்ணுதலே நலமாகும். புசிக்கும் காலத்தில் ஒருவருடனும் பேசலாகாது பேசினால் சுவாசத்தின் மூலம் கொசு முதலாயின வாய்க்குள் சென்று விடக்கூடும். அதி நுட்பமான மீன் முட்டைகளும், சில அற்ப பிராணிகளும் கலக்கப்பெற்றே தண்ணீர் இருத்தலால் அதை வடிகட்டியன்றிக் குடிக்கக்கூடாது. வெங்காயம், பெருங்காயம், கீரை, அத்தி, ஆல், இலந்தை, சுரை, புடல் முதலியனவைகளிலும் பற்பல நுண்ணிய உயிர்கள் எப்பொழுது மிருக்கின்றன. ஆதலின், அவைகளை உண்ணவே கூடாது. முருங்கை, பீர்க்கு, முள்ளங்கி முதலியன மிதமிஞ்சின கொழுப்பைக் கோடுப்பவை. ஆதலின், இவைகளையும் தொடக்கூடாது. மற்றும் மதிமயக்கத்தைக் கொடுக்கும் பானுதிகளையும் கைக்கொள்ளலாகாது.

பிரயாணம் :—ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லவேண்டுமாயின் மாடுகளிலேனும், குதிரைகளிலேனும், அவைகள் பூட்டிய வண்டிகளிலேனும் செல்லக்கூடாது. சென்றால் செல்லும் வழியில் கிடக்கும் உயிர்கள் நாசமுறும் அப்பாதகங்கள் அச் சவாரி போவாரையே சாரும். மேலும் ஒருவன் தனது இரண்டு கால் நோவாதிருக்க வேண்டி ஒரு விலங்கின் நான்கு கால்களும் செலுத்துவோன் இரண்டு கைகளும் வருந்த விடுவது நியாயமாகுமா? ஒவ்வொருவரும் தங்கள் காரியங்களைச் செய்யத் தாங்களே நடக்க வேண்டும். அப்படி நடக்கும் போதும் வழியிலுள்ள பிராணிகளையெல்லாம் மெல்லிய மயிற்றோகையால் மெதுவாக நீங்குமாறு துலக்கிக்

கொண்டே வாயையும், மூக்கையும் வஸ்திரத்தால் மூடிக் கொண்டே நடத்தல் வேண்டும். மூடாவிட்டால் உட் கொள்ளும் சுவாசத்தின் வழியாக அற்பப் பிராணிகள் வாய்க்குட் சென்றுவிடும். மழை காலங்களில் உயிர்கள் பலவும் வெளிப்பட்டு அங்குமிங்கும் சஞ்சரித்துக்கொண் டிருக்குமாதலால், அக்காலத்தில் பிரயாணம் செய்யா திருத்தலே நலம். இதனாலே தான் இக்காலத்தில் துறவிகள் இருந்த இடம் விட்டுப் பெயராதிருக்கின்றனர்.

இயற்கையாய்த் தலையிலுண்டாகும் பேன்களுக்கு நாசம் உண்டாகும்படி மயிர்கழித்துக் கொள்ளல் கூடாது. ஆனால் மயிர்களைப் பறித்து எடுத்துவிடலாம். பிறர் மனம் கலங்கி அழுமாறு அவரிடமிருந்து அநியாய வழியில் அபக ரித்த செல்வமெல்லாம் அப்படி அபகரித்தவன் அழுதரற்ற அவனிடமிருந்து பிறர் கைப்பற்றவே செய்வர். இதற் கோர் ஐயமில்லை. தீயநெறியால் வந்த செல்வம் தீமையைக் கொடுக்குமேயன்றி நன்மையைக் கொடுக்குமா? செல் வத்தாலாகும் பயன் உத்தமர்க்கும், ஒன்றுமில்லாதவர்க்கும் உறுப்புக் குறையுள்ளவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத் துத் தருமத்தைத் தேடிக்கொள்வதேயாகும்.

கொடையாளி மனம் வாக்குக் காயம் பரிசுத்தமுள்ள வனாய் இருப்பது நல்லது; மலர்ந்த முகமும் இனியமொழி களும் வேண்டும். கைம்மாறு கருதாமல் ஒருவர்க்கொரு வர் ஒன்று கொடுத்ததை அப்பொழுதே மறத்தலும் வேண் டும். கொடுக்கக் கூடாதவருக்குக் கொடுத்தால் அடுக்கக் கூடாத பாவமெல்லாம் வந்தடுக்கும். ஈகையில் சாதி மத வேறுபாடு சிறிதும் கவனித்தல் ஆகாது.

உலகத்தில் உதவி செய்பவர்கள் பலராய் இருக்கலாம். ஆனால், செய்ந்நன்றி மறவாதவர் சிலராகவே இருக்கின்ற

னர். இது வருந்தத் தக்கதே. சீர்தூக்கி நோக்குங்கால் "செய்தாரின் நல்லர் சிதையாதார்" என்றே சொல்ல வேண்டி இருக்கிறது. செய்ந்நன்றி மறப்பதுபோலும் தீமை வேறொன்று இல்லை. ஆசிரியர், கற்றோர், கல்லாத வர், மேலோர், கீழோர், பெண்டிர், வேலைக்காரர் முதலான வர்களிடத்தில் இனிமையான வார்த்தைகளையே பேசுதல் வேண்டும் ஏற்றவாறு அடக்கம் உள்ளவனுய் நடத்தலே வேண்டப்படுவதாம் எல்லோரிடத்தும் நல்லெண்ண முடையவராய் இருத்தல் வேண்டும். பொய், புறங்கூறுதல், கடுஞ் சொல் அறவே நீக்குதல் வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று சொல்வவத ஒழித்துவிடல் வேண்டும். சொல்லைப்போல வல்லமை உள்ளதை எங்கும் நாம் கண்டிலேம்.

கணப் பொழுதில் ஒருவனைக் களிக்க வைப்பதற்கும், கரைய வைப்பதற்கும் சொல்லே காரணமாக இருக்கிறது. ஒவ்வொருவரும் தாங்கள் சொல்லும் சொல்லாலேயே மேன்மை தாழ்மைகளை அடையா நிற்கின்றனர். 'பல்லக் கேறுவதும் சொல்லாலே பல்லுடைபடுவதும் சொல் லாலே' என்றதும் பிரசித்தமான பழமொழி அல்லவா? எவரிடத்திலாவது யாதேனும் பேச வேண்டி இருந்தால் ஆழ்ந்து ஆய்ந்து யோசித்து இனிமையான குரலால் பெருக்கமான பொருளடங்கின சுருக்கமான மொழி களையே பேசுதல் வேண்டும்

எல்லாச் சாதி மக்களும் பிறப்பாலும் உருவ அமைப் பாலும் இரத்தத்தாலும் ஒத்திருக்கின்றனர். அவ்வாறு இருக்கும்போது மக்களுக்குள் சாதிபேதங்களைக் கற்பிப்பது பொருந்துமா? நடுநிலை வாய்ந்த ஆன்றோர் இதனை ஒப்புக் கொள்வரா? அதனுல் அனைவரும் சாதி பேதம் என்ற சனியனை அடியோடு தள்ளிவிடுவது நல்லது பண்

டைக் காலத்திய நுண்ணறிவில்லாப் படிப்பாளிகள் தன்னலங்கருதியே வருணபேதங்களை இடைக்காலத்தில் வகுத்துக்கொண்டனர். அவர்கள் கையாண்ட சுருதி ஸ்மிருதி முதலிய நூல்களும் சிறிதும் அவசியம் இல்லை. கல்வி அறிவு, ஒழுக்கம், தயை, தாட்சண்யம் முதலியவைகளினால் அல்லாமல் பிறப்பினால் ஒருவனை மேலானவன் என மதித்தல் சிறிதும் தகாது.

எத்தகைய சாதியாரும் ஒன்றே. முயற்சியால் மோட்ச லோகம் யாருக்கும் பொதுவே. இங்கு இதுவரை என்னால் உபதேசிக்கப்பட்டவைகளையே வேதமாகக் கொண்டு என்னையே வணங்கி வழிபடுவீராக. எல்லா நலங்களும் உமக்கு எய்துவது திண்ணம். இஃது உறுதி. பொய்யன்று." மகாவீரர் மதக் கொள்கைகள் பலவற்றை எல்லா மக்களும் எளிதில் ஏற்றுக்கொள்ளுமாறு எடுத்துரைத்தார். விண்ணமுத தாரைபோல் வெகு நேரம் சொல் மாரி பொழிந்தார். கேட்டவர் யாவரும் உள்ளம் இளகி ஆனந்த பரவசத்தால் அப் பரமாசிரியரைப் பற்பலவிதமாகப் புகழ்ந்து போற்றி அவர் தம் மதத்தை மெற்கொண்டு நடக்கத் தொடங்கினர். சீடராகி அவர் அண்டையிலே நின்று சேவை செய்யலாயினர். அக்காலத்தில் பெண்கள் பலரும் அச்சமயத்தைச் சார்ந்தனர். மகாவீரர் அனைவரையும் வாழ்த்தொலியால் மகிழ்வித்தார். எல்லோருக்கும் விடை கொடுத்தார். வாழ்க வாழ்க என்று எல்லோரும் வாழ்த்தி தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்றனர்,

# 17. தமது மதத்தைப் பரப்புதல்

பிறகு மகாவீரர் இந்திரபூதி உள்ளிட்ட பல முக்கிய மான சீடர்களுடன் அடுத்த ஒரு வனத்திற்குச் சென்றனர். தமது மதக் கொள்கையின் நுட்பமான விஷயங்களையும் பலரறியப் பிரசங்கிக்கு மோர் ஆற்றலையும் நடையுடை பாவனைகளிற் சில சீர்திருத்தங்களையும் அவர்களுக்கு அருளிச் செய்தார். பிறகு அவர்கள் ஒவ்வொருவரையும் மதப்பிரசாரம் செய்யுமாறு ஒவ்வொரு நாட்டுக்கும் அனுப்பினர். அவர்களும் அவ்வாறே செய்தனர். பல லக்ஷக்கணக்கான மக்களை தமது மதந்தைத் தழுவும்படி செய்தார்கள். தாமும் பல சீடர்களுடன் பல ஊர்களுக் கும் பிரயாணம் செய்து போதித்து அளவிறந்த அறிவாளி களையும் தமது கொள்கைகளைத் தலைமேற் கொண்டொழு கச் செய்தனர்.

பல இடங்களிலும் சபைகளையும், மடங்களையும், பாடசாலைகளையும் ஸ்தாபித்தார். அவைகளுக்கு வேண்டும் பல சௌகரியங்களையும் ஏற்படுத்தினர். இலட்சக்கணக் கான சீடர்களைப் பல பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு முக்கியமான சீடரைத் தலைவராக நியமித்தார். உள் நாடுகளோடு புற நாடுகளுக்கும் தமது கொள்கைகளைப் பரப்ப அனுப்பித்துக்கொண்டே யிருந்தார்.

மகாவீரர்க்கு வயது அறுபதுக்கு மேற்பட்டது. அக்காலத்தில் கபிலவஸ்து என்னும் பட்டணத்தில் அவத ரித்தருளிய புத்தர் தமது மதக்கோட்பாடுகளைப் பல இடங் களிலும் சென்று பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். மகாவீரரை வாதத்தில் மடக்கவும், அவரது கொள்கைகளை

அடிபோடு தொலைக்கவும் துணிந்தார். சில மேதாவிகளைத் தயார் செய்து அவர்களை அவர்பா லனுப்பினர். அவ்வறி வாளிகள் வீரரிடம் சென்று மதப்போர் இட்டனர். அப்பொழுது அவ்வாசாரியர், சில நுட்பமான வினாக்களால் அவர்களைத் தோல்வியுறச் செய்தார். பல விசித்திரகரமான சித்துக்களால் பிரமிக்கும்படி செய்து விட்டனர். அதனால் அவர்களும் அவ்வீரரது கொள்கையே வெகு சாரமானது எனத் துணிந்து அவருக்குச் சீடராயினர்கள். இப்படியே மகாவீரரும் " தம்மிடமுள்ள பல வித்துவான்களையும் புத்தரிடம் சொற்போர் செய்ய அனுப்பினர். அவரும் அவர்களை வென்று தமது மதத்திற் சேரச் செய்தனர் என்று சொல்வாருமுண்டு. மகாவீரர் பல ஆண்டு தாம் வந்த நோக்கத்துடன் தம் வேலையை நிறைவேற்றினர். எப்போதும் பலர் அவரைச் சுற்றி இருந்துகொண்டே இருந்தனர். பல கிராமங்களுக்குச் சென்றார். பல தேசங்களிலுமுள்ள ஆண் பெண் பாலர்கள் அனைவரும் அவருடைய கொள்கைகளைப் பின்பற்றினர். அடுத்துள்ள நாட்டு மக்கள் யாவரும் அவர் மதக்கருத்தை ஏற்றனர். மகாவீரர் ஈடும் எடுப்பும் இல்லாக் கல்வி கேள்விகளில், வாக்கு வல்லமையில், ஒழுக்கம், தோற்றம் முதலியவைகளில் சிறப்புற்று விளங்கினர். இவரைப்போல், அக்காலத்தில் எவரும் விளங்கவில்லை. ஆசிரியர்க்கு வேண்டிய நல்லிலக்கணங்கள் எல்லாம் நிறைந்திருந்தார் இவரைப் போற்றாத அரசர், பிரபு, வித்துவானே இலர். மதிக்காதவர் சிலரே ஆயினும், இவரது மதப் பிரசாரம் எவராலும் எக்காலத்திலும் தடைப்படுத்தப்படவில்லை. இதனால் முன்னிருந்த மதங்களெல்லாம் சூரியன் முன் நக்ஷத்திரங்கள்போல் ஒளி மழுங்கலாயின. சென்றவிடத்து எல்லாம் சிறப்புற்றார். சிறுமை என்பதை இவர் எவ்விடத்திலும் கண்டதில்லை.

மழைக்காலம் தொடங்கியது. அத்தருணம் பாவநகர் வேந்தன் மகாவீரரை வந்து வணங்கி இம்மாரிக்கால முழு தும் சீடர்களுடன் தன்னகரிலேயே எழுந்தருளியிருக்க வேண்டுமென வேண்டிக் கொண்டான். அதற்கு இணங் கிய வீரரும் சீடர் முதலிய பரிவாரங்களுடன் பிரயாணப் பட்டு பாவபுரியை அடைந்தனர். அந்நகர வேந்தனால் உபசரிக்கப்பட்டு வந்தனர். சீடர்களுக்கெல்லாம் தனி யிடம் கொடுக்கப்பட்டிருந்தது. விசேடமான விருந்து களும் நடைபெற்று வந்தன.

இங்ஙனம் மக்கட்கூட்டம் பெருகப் பெருக வீரரும் அவரது மனமெல்லாம் உருக உருகக் கொல்லாமை, புலா லுண்ணாமை, பொய்யாமை, கள்ளுண்ணாமை, களவு செய்யாமை முதலான விடயங்களை எடுத்தெடுத்து வெகு இனிமையான முறையில் இனிது விரித்துரைப்பாராயினர். இக்காலத்தில் சில நூல்களையும் இயற்றினார் இவர் எனக் கூறுவார் சிலர்; ஐப்பசி செல்லக் கார்த்திகை பிறந்தது; ஒருநாளிரவு பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். அப் போது தமக்கு நிர்வாண நிலைமை அடுத்திருப்பதை ஞான திருஷ்டியால் உணர்ந்தார். சட்டெனப் பிரசங்கத்தைப் பூர்த்தி செய்து விட்டார். பக்கத்திலிருந்த சில முக்கிய மான சீடர்களை மாத்திரம் அழைத்தார் பக்கத்து அறையிற் புகுந்து அவர்களை அடுத்திருக்கும்படி செய்து சில உரை கள் சொன்னார்.

## 18. இறுதிக்கால இன்பவுரை

" என் அருமைச் சீடர்களே, நிர்வாணம் அடையும் காலம் எனக்கு நெருங்கியது. சிறிது நேரம் சென்றால்

என்னை நீங்கள் காண முடியாது இனி, நான் கூறும் மொழிகள் இறுதிக்கால இன்னுரைகள். ஆதலால், கருத்தோடு கேளுங்கள். கேட்டவழி நடந்து கொள்ளுங்கள். நீங்கள் யாவரும் மனங்கலந்த நண்பராய் இருத்தல் இன்றியமையாதது. நீங்கள் ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒவ்வொருவர் தலைமை பூண்டு நடத்துங்கள். இடையீடின்றி நாடுகள் தோறும் சென்று நல்மொழி புகலுங்கள். உங்கள் மதக் கோட்பாடுகளை நிலை நாட்டுவதில் குறிக்கொண்டு ஒழுகல் வேண்டும். அவ்வாறு நடக்கும்போது துன்பம் பல நேரலாம் உங்கள் அறிவுரைகளைக் கேட்பவருள் அறிஞர்கள் மனம் இளகி வணங்கி உங்கள் கொள்கைகளைக் கையாடுவர். அரை குறைப் படிப்பாளிகள் பொறாமை கொண்டு வாய்ச் சண்டைக்கு வருவார்கள். அறியாமையோடு பேசுவர். அப்போது நீங்கள் மிக்க வணக்கத்துடன் இனிய மொழிகளைப் பேசுங்கள். மலர்ந்த முகங் காட்டுங்கள். இணக்கமாக நடந்து கொள்ளுங்கள். அவர்களை நீங்கள் வசப்படுத்த முயலுங்கள். அதுவே அதற்கேற்ற வழியாகும் சில மூடர் குருட்டு மதச்சார்பால் வாய்ச் சண்டையோடு நில்லார். கைச் சண்டைக்கும் கழிப் போர்க்கும் எதிர்த்து நிற்பர். அத்தகையோரை நீங்கள் அடுத்து வணங்கி. "அடிக்கும் கை நோகும். அப்பாவத்திற்கு நாமல்லவா ஆளாகவேண்டும். ஐயனே அருள் செய்வீராக." என இனிய மொழி பல சொல்லி அவர் கோபத்தைத் தணிவித்தல் வேண்டும் நமது கொள்கைகளை நயம்படக் கூறி நல்வழிப் படுத்துங்கள். எவரிடத்திலும் எப்போதும் கோபம் கொள்ளக் கூடாது மற்ற கோபம் எதுவும் கொடுக்காத தீமைகளைக் கொடுக்கக் கூடியது. "பொறுத்தவர் பூமியாள்வார்" என்பது உலகம் உணர்ந்த உயர்மொழி.

உண்மைமிக்க உயர் மெய்யன்பர்களே, பலபட விரித்துரைக்க விரும்பவில்லை. ஆசையும் சோம்பலும் அறவே நீக்குதல் வேண்டும். நீங்கள் யாவரும் ஒற்றுமையும் உயர் நோக்கமும் ஒழியாமல் கொள்ளவேண்டும். எமது மதம் எனது காலத்தில் எப்படி உயர்ந்து உயர்ந்தோரால் போற்றப்பட்டதோ அவ்வாறே உங்கள் காலத்திலும் இருத்தல் வேண்டும் இதுவே எனது இறுதிக்கால விருப்பம். அதுவே குரு காணிக்கையுமாகும். ஆயினும் கால நிலைக்கு ஏற்றவாறு மதக் கொள்கைகளைச் சிறிது மாற்றவோ, திருத்தவோ, புதுக்கவோ செய்து மதத்தைப் பரப்ப உங்களுக்கு உரிமை தந்தேன் " என்றனர்.

# *19. பேரின்ப நிலை பெறுதல்*

இவற்றைக் கேட்டிருந்த சீடர்களுக்குக் கண்ணீர் ஆறாய்ப் பெருக்கெடுத்தோடியது சீடர்கள் ஆசிரியரைக் கும்பிட்டனர் "சுவாமி தாங்கள் அருளிய மொழிப்படி தவறாது நடக்கிறோம் எங்களால் இயன்றதை நாங்கள் செய்துகொண்டே இருப்போம் இஃது உண்மையே. ஆயினும், தங்கள் பிரிவு எங்கள் மனத்தை மிகவும் புண்படுத்துகிறது. மிக வருத்துகிறது பொறுக்க முடியவில்லை. நாங்கள் என்ன செய்வோம்" என்றனர். அதற்கு வீரர், "இஃதென்ன அறியாமை யான் இனிச்செல்வது மேன்மையான பதவிக்குத்தானே. தாழ்ந்த இடத்திற்கு அல்லவே. எமது மேம்பாட்டைக் கண்டு நீங்கள் களிப்படையுங்கள். கரைந்துருகுதல் அழகாக மாட்டாது. இனி இந்த உடம்பின்மேல் வைத்த பாசத்தை நீக்கிவிடுங்கள். எமது நிர்

வாணமாகிய நிலையைப் பெறப்போகும் இந்நாளை ஒரு நல்ல நாளாகக் கொள்ளுங்கள். ஓர் உற்சவ காலமாக எண்ணிக் கொண்டாடுங்கள். மற்றவரையும் இவ்வாறே கொண்டாடும்படி செய்ய வேண்டும் என்றருளினர். அச்சீடர் சூழ்ந்திருக்க அவர் இடையே மகாவீரர் நிட்டையிலிருந்து நிர்வாண இன்பத்தில் நிலைபெறலாயினர். அன்று கார்த்திகை திங்கள், பூர்வபக்ஷ அமாவாசையாகும்.

# 20. சிறப்பும் சீரும்

குருமூர்த்தியின் பெருமை நாடெங்தும் பரவியது. நகரம் எங்கும் எட்டியது துக்க கரமான செய்தியை உலக முழுதும் பரப்புவதுபோல் சூரியன் தோன்றி எழுந்து செவ்விய கிரணங்களை எவ்விடங்களிலும் பரப்பினன். பல நாட்டு மக்களும், அரசர்களும், அமைச்சர்களும் அங்கு வந்தனர். கற்றவரும், மற்றவரும் வந்தனர். மனம் வெதும்பக் கண்ணீர் ததும்பி வெளிப்பட துக்கத்தோடு அங்கு வந்து கூடி மகாவீரரது நிஷ்டையில் விளங்கிக்கொண்டிருக்கும் உடலைக்கண்டு வாய்விட்டுக் கதறினர். அப்போது இந்திரபூதி முதலான சீடர்கள் ஆசாரியருடைய ஆணையைத் தெரிவித்து அவர்களை அழவொட்டாது தடுத்தனர். இத் தினத்தை ஓர் உற்சவ தினமாகக் கொண்டாட வேண்டுமென்று சொல்லினர் ; எல்லோரும் அவ்வாறே செய்ய உடன்பட்டனர் ; என்றாலும் ஆசிரியர் அகன்றதாலாகிய துக்கம் அவரது உள்ளத்தை வருத்தாமல் இருக்கவில்லை. அப்பொழுது தலைமைச் சீடராகிய கௌதம இந்திரபூதி மகாவீரரைப்பற்றி அங்கே இருந்

தவர் எல்லோருக்கும் நன்றாய்க் கேட்கும்படி எடுத்து ரைத்தார் மகாவீரரது அவதாரப் பெருமை, அவர் அவதரித்ததற்குக் காரணம், அவர் இளமை முதற் கொண்டே கொண்டிருந்த எண்ணம், உலகத்தார் உய்ய நல்வழியொன்று காண வேண்டும் என்ற நோக்கம், அதற்குரிய காலம் வாய்த்தவுடன் அரசச் செல்வத்தையும் அணுவளவும் மதியாது அறவே வெறுத்துச் சுக துக்கங் களில் ஈடுபடாமல் துறவியான நிலை, அதி வைராக்கியத் துடன் விரத தவயோகங்களை அனுட்டித்து வந்தது, பரி சுத்தமான தமது கொள்கைகளை ஓய்வொழிவின்றி உலகத் தில் பரவச்செய்து வந்த ஒப்பற்ற பேராற்றல், அவர் தோற் றம், வாக்குச் சாதுரியம், கருணை, பொறுமை முதலான குண விசேஷங்கள் ஆகியவைகளை எடுத்தெடுத்து வெகு நேரம்வரை விவரித்துக் கொண்டிருந்தனர். கேட்டிருந் தவர்கள் எல்லாம் சிந்திக் கொண்டிருந்த கண்ணீரைப் பிறர் அறியாதவாறு துடைத்துக்கொண்டே இருந்தார்கள்.

கதிரவன் நடுவானத்தில் நின்று கொண்டிருந்தாலும் ஒளி மழுக்க முற்றிருந்தான். அக்காலத்தில் அடியார்கள் ஆசாரியரது அருமைத் திருமேனியை அலங்கரித்து முறைப் படி அடக்கம் செய்தனர் அவர் விழாவையும் வெகு விமரிசையாய் நடத்தினார்கள் மகாவீரர்க்குப் பிறகு, அவர் அருளியபடியே தலைமைச் சீடராகிய கௌதம இந்திர பூதி, பல சீடரிடத்தும், பல அடியார்கள் கூட்டங்களைப் பிரித்தளித்து மதப்பிரசாரம் செய்யப் பல தேயங்களுக்கும் அவர்களை அனுப்பினர். எல்லாப் பகுதிகளுக்கும் தாமே தலைவராக இருந்தார் இவர் காலத்தும் இவருக்குப் பின் பல நூற்றாண்டுகளில் மதாசாரியர் காலங்களிலும் இச்சமண மதம் சிறிதும் தலை சாயாமல் நிலைபெற்று நிலவிக் கொண் டிருந்தது பிற்காலத்தில் வட நாட்டிலும் தென்னாட்டி

லும் தலை எடுத்தோங்கிய சில சமய ஆசாரியர்களால் இம் மதம் பெரிதும் குறைந்து கொண்டே வந்தது. அச்சமயத்தை அருக சமயம் சமண சமயம் எனப் பெயரிட்டு வழங்கினர். இங்ஙனமே எதையும் எவரும் காலா காலத்தில் செய்வார்களானல் நாடு எவ்வளவு சீர்பெறும்! நாட்டு மக்களும் நன்மை அடைவார்கள்.

# 21. முடிவுரை

இவருடைய வாழ்க்கையில் எவ்வளவோ இடையூறுகள் எத்தனையோ முறை பகைவர்களால் நேர்ந்தன எத்தனையோமுறை பகைவர்களால் தாக்கப்பட்டார். காடுகளில் சுற்றித் திரிந்துகொண்டிருந்தபோது காட்டில் உள்ள தீய விலங்குகளும் இவருக்கு அடிமையாகி நின்றன. இவரிடத்திலே விளங்கிய தெய்வீக ஞானம் இவரைச்சுற்றியிருந்தவர்கட்கும் அறிவுச்சுடரைப் பரப்பியது. மெய்ஞ்ஞானத்தை உண்மையாகப் பெற விரும்புகிறவன் தனக்குப் பிற உயிர்களால் நேரிடுகிற துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு தான் அவ்வுயிர்கட்கு எத்தகைய துன்பத்தையுஞ் செய்யாதிருத்தல் வேண்டும். இவ்வாறிருத்தல்தான் உண்மையான அருந்தவமாகும். தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனருடைய,

> உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற் குரு

என்னும் திருவாய்மொழியும் இதனைத்தான் வலியுறுத்துகிறது. தமது வாழ்க்கையில் மகாவீரர் இவ்வரும் தவத்தை விடாப் பிடியாகக் கொண்டிருந்தார்.

இவருக்கு எத்தகைய பற்றும் எக்காலத்திலும் எள்ளளவேனும் இருந்ததில்லை. செல்வர்களையும் வறியவர்களையும் நன்மைகளையும் தீமைகளையும் உயர்வுகளையும் தாழ்வுகளையும் ஒரே தன்மையாகப் பார்த்த இவருடைய மெய்ஞ்ஞானச் செல்வத்தைத் தான் எல்லாச் சமய நூல்களும் அருந்தவத்தால் பெறும் திருந்திய ஞானமென்று பறையறைகின்றன. இத்தகைய தெய்வீக ஞானத்தைப் பெறுவோர் இவ்வுலகில் கோடிக் கொருவரே யாவர்.

இவர் தாமடைந்த மெய்ஞ்ஞானத்தினைத் தம்முடைய மாணவரும் பெற்றுச் சிறப்புறுதல் வேண்டுமென எண்ணினாராயினும் அங்ஙனே ஒரு சிலர்க்கே உண்டாயிற்றன்றி எல்லோருக்கும் உண்டாகவில்லை. எத்தனையோ பிறவிகளிற் செய்த அருந் தவத்தால் உண்டாகற் பாலதாய ஞானம் எல்லோருக்கும் எளிதில் உண்டாகிவிடுமென எதிர்பார்த்தலும் கூடுமோ ?

# மகாவீரர் வரலாற்றுக் கதைகள்

## 1. மதயானையை அடக்குதல்

மகாவீரர் வயது பன்னிரண்டு நிறைந்தவராய் இருந்த காலத்தில் தம்முடைய நண்பர்களோடு ஓரிடத்தில் விளையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது யானை ஒன்றுக்கு மதம் பிடித்து விட்டது. மதம் பிடித்த யானை பாகனையும் வழியில் எதிர்ப்பட்டவர்களையும் மிதித்துக் கொன்று மகாவீரரும் நண்பர்களும் விளையாடிக்கொண்டிருந்த இடத்திற்கு வந்துவிட்டது. மகாவீரரோடு விளையாடிக் கொண்டிருந்த மற்றப் பையன்கள் மூலைக்கு ஒருவராக ஓடிப் போய் விட்டார்கள். மகாவீரர் அந்த யானைக்குச் சிறிதும் அஞ்சவில்லை. அந்த யானையின்மேற் பாய்ந்து ஏறி அதனை அடக்கி வழிக்குக் கொண்டு வந்தார். திரும்பவும் அதனைக் கூடத்திற்கே கொண்டுபோய்ச் சேர்த்தார். பாகர்கள் விரைந்துவந்து யானையைக் கட்டிவிட்டார்கள். பெற்றோரும் மற்றவர்களும் இவருடைய தீரத்தை மிகவும் வியந்து பாராட்டினார்கள். "நீ இவ்வாறு சிறிதும் அஞ்சாமல் அந்த யானையிடஞ் செல்லலாமா ? அந்த யானை உன்னையும் மிதித்துக் கொன்றுவிட்டால் என்ன செய்வாய் ?" என்று கேட்டார்கள். அதற்கு மகாவீரர், "இந்த யானைக்கு நான் சிறிதும் அஞ்சவில்லை எனக்குள்ளே காமம், குரோதம் முதலிய மதயானைகள் இருக்கின்றன. அந்த யானைகட்குத் தான் நான் அஞ்சுகிறேன்" என்று மறுமொழி கூறினர்.

## 2. தெய்வீக ஆடை

மகாவீரர் துறவை மேற்கொள்ளத் தொடங்கியவுடன் மூன்று நாட்கள் உண்ணு நோன்பினை மேற்கொண்டிருந் தார். அப்பொழுது இந்திரன் அவருக்குக் காட்சியளித்துத் தெய்வத்தன்மை பொருந்திய ஓர் ஆடையை வழங்கி விட்டுச் சென்றான். மகாவீரர் அவ்வாடையை அணிந்து கொண்டு மற்றவைகளை யெல்லாம் களைந்துவிட்டு ஓர் இடத்தில் தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்போது சோமதத்தன் என்னும் பெயரையுடைய ஒரு பார்ப்பனன் மகாவீரரிடம் வந்து ஏதேனுந் தானங் கொடுக்க வேண்டு மென்று கெஞ்சினன். தம்முடைய கையிலே யாதும் இல்லாதபடியால் இவர் தாம் அணிந்திருந்த ஆடையில் பாதியைக் கிழித்துக்கொடுத்தார். மறு பாதியைத் தாம் கட்டிக்கொண்டு தவத்தில் உட்கார்ந்தார். ஆனால் அந்த ஆடை அவருக்குத் தெரியாமலே நழுவிக் கீழே விழுந்து விட்டது.

இவரிடத்தில் ஆடையைத் தானங் வாங்கிக்கொண்டு சென்ற பார்ப்பானாகிய சோமதத்தன் தான் பெற்ற ஆடையை ஒரு வணிகனிடங் கொண்டுபோய்க் கொடுத்து அதற்கு விலை தரவேண்டுமென்று கேட்டான். அவ்வணி கன் சோமதத்தனைப் பார்த்து, "இவ்வாடை தெய்வத் தன்மை பொருந்தியது இதற்கு நூறு தங்கக்காசுகள் கொடுக்கலாம் மறு பாதியையுங் கொண்டு வருவாயானால் முந்நூறு தங்கக் காசுகள் கொடுப்பேன்" என்று சொன் னான். சோமதத்தனுக்குப் பேராசை பிடித்து மறுபடியும் மகாவீரர் தவஞ் செய்யும் இடத்திற்கு வந்தான். மறுபாதி யாடை கீழே கிடத்தலைக் கண்டான். அதனை எடுத்துக் கொண்டுபோய் வணிகனிடத்திலே கொடுத்துவிட்டு முந் நூறு தங்கக் காசுகளை வாங்கிக்கொண்டு போய்விட்டான்.

தவத்திலிருந்து வெளிப்பட்ட மகாவீரர் மறுபாதி யாடை யுங் காணுமற் போய்விட்டதை அறிந்தார். இனிமேல் ஆடையே உடுத்துவதில்லை என்னும் உறுதி கொண்டவ ராய் அதுமுதல் நிர்வாணமாகவே இருந்தார்

## 3. பாவந்தீர வழி

இந்திரனுல் கொடுக்கப்பட்ட ஆடை பாதி தருமமாக வும் பாதி களவிலும் போய்விட்ட செய்தியை நீங்கள் அறிவீர்களல்லவா ? அதுமுதல் மகா வீரருக்கு மிகுந்த வயிராக்கியம் உண்டாகிவிட்டது. ஆடையை அணிந்து கொண்டால் கள்ளனிடமிருந்து அதனைக் காப் பாற்றுவதே நமக்குப் பெரிய வேலையாக இருக்கும். ஆகவே இனிமேல் உடை உடுத்துவது இல்லையென்று முடிவு செய்து ஆடையற்றவராகவே இருந்தார் இவர் ஆடையில்லாமலிருப்பதைப் பார்க்கவே பலருக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. இவரைப் பார்த்து, "நீ இவ் வாறு ஏன் இருக்கிருய் ? இவ்வாறு இருத்தல் கூடாது. நீ ஆடை கட்டிக்கொண்டுதான் இருக்க வேண்டும்" என்று கூறி இவரிடம் ஆடையையுங் கொடுத்துக் கட்டிக் கொள்ளுமாறு கூறினர். மகாவீரர் அதனை வாங்கிக் கட்டிக் கொள்ளவோ அவர்கள் சொன்னவைகளைக் கேட்கவோ இல்லை. அதனுல் சினங்கொண்ட பலர் இவரைக் கைகளா லும் தடிகளாலும் பலவாறு அடித்து வருத்தினுர்கள். மோட்சத்தை யடைய வேண்டுமென்ருல் நம்முடைய பாவமெல்லாந் தொலையவேண்டும். பாவந் தொலைவதற்கு இவ்வாறு துன்பப்பட்டு அனுபவிப்பது தான் சரியான வழி என்று முடிவு செய்து தம்மை வருத்திய வருத்தங்களை

யெல்லாம் அவர் பொறுத்துக் கொண்டார் இதனால் இவரு டைய தீவினைகளெல்லாம் தொலைய இவர் நாளடைவில் தூய்மை புடையவரானார்.

## 4. புலியும் மகாவீரரும்

**ம**காவீரர் மரங்கள் அடர்ந்த ஒரு பெரிய காட்டிலே சிலகாலந் தவஞ் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் வழிப்போக்கர்கள் சிலர் இவர் தவஞ் செய்து கொண் டிருந்த காட்டுவழியாகச் சென்றுகொண்டிருந்தார்கள். அப்போது புலியொன்று மகாவீரர் இருந்த பக்கமாகச் செல்வதை அந்த வழிப்போக்கர்கள் கண்டார்கள். அவர் கள், "ஓ" என்று பேரிரைச்சலிட்டுப் புலியை விரட்டி விட்டார்கள். பிறகு மகாவீரரிடம் போய், "நீங்கள் ஏன் இத்தகைய கொடிய காட்டிற்கு வந்தீர்கள்? இப்பொழுது புலியொன்று இந்தப் பக்கமாக வந்தது. நல்ல சமயத்தில் நாங்கள் அதனைப் பார்த்து விரட்டிவிட்டோம். இல்லா விட்டால் நீங்கள் இந்நேரம் அந்தப்புலிக்கு இரையாகப் போயிருந்தாலும் இருப்பீர்கள்" என்று சொன்னார்கள்.

இதனைக் கேட்ட மகாவீரர், "புலியும் என்னுடைய உடன் பிறப்புத்தான் புலியாகட்டும் வேறு தீய விலங்குக ளாகட்டும் அவை என்னை ஒன்றுஞ் செய்ய மாட்டா" என்று மறுமொழி கூறினார்

வழிப்போக்கர்கள், "நீங்கள் உங்களைக் கொலைபுரிய விருந்த புலியை உடன் பிறப்பு என்று சொல்லி உறவு கொண்டாடுகிறீர்கள்; மெய்ஞ்ஞானம் உங்கட்கு உண் டாகி யிருக்கலாம் ஆனால் புலிகளுக்கும் மெய்ஞ்ஞானம் உண்டாகிவிட்டது என்று கூற முடியுமா? இனிமேல்

இவ்வாறு இருக்காதீர்கள்" என்று கூறிவிட்டு அவர்கள் தமது காரியத்தின்மேற் சென்றார்கள். மறுநாள் அவர்கள் அவ்வழியாகத் திரும்பி வந்தபோது முதலிற் பார்த்த புலி தவம் புரிந்துகொண்டிருக்கும் மகாவீரருக்குப் பக்கத்தில் படுத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அதுமுதல் மெய்ஞ்ஞானிகளைத் தீய விலங்குகள் யாதுஞ் செய்ய மாட்டா என்னுஞ் செய்தி அவர்கட்கு நன்கு விளங்கி இவ்வாறு எத்தனையோ பெரியவர்கள் தமது மெய்ஞ்ஞானப் பெருமையால் தீய விலங்குகளையுந் தம் வழிப்படுத்தி யிருக்கிறார்கள்.

## 5. சண்டகௌசிகன் என்னும் பாம்பு

ஒருநாள் மகாவீரர் காட்டிலே சென்றுகொண்டிருந்தார். அப்போது சண்ட கௌசிகன் என்னும் கொடிய நச்சுப் பாம்பு ஒன்று இவரைக் கண்டது. இவரைக் கடிக்க வேண்டுமென்னும் நோக்கத்தோடு வெகு தொலைவிலேயே, "புஸ்" என்று சீறிக்கொண்டு ஓடி வந்தது. "பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்" என்று உலகத்திலே சொல்லுவார்க ளல்லவா? ஆனால் மகாவீரர் அப் பாம்பைப்பார்த்துச் சிறிதுகூட அஞ்சவே இல்லை. நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார். அப் பாம்பு இவரை நெருங்கியவுடன் காலின் கட்டை விரலிலே கடித்தது. அப்போது இவர் அந்தப் பாம்பைப் பார்த்து, "தம்பி சண்ட கௌசிகா! உன்னுடைய நஞ்சு என்னை ஒன்றுஞ் செய்யமாட்டாது. நீ என்னைக் கடித்ததனால் நான் சாகமாட்டேன். நான் இவ்வுலகத்தில் இருக்கிற யாருக்குமே அஞ்சுவது கிடையாது. உன்னுடைய தீ வினைதான் மிகுதிப்பட்டு நீ தொல்லைக்கு உள்ளாவாய். நீ கடைத்

தேறும் வழியையுந் தேடிக்கொள்ள வேண்டும் இல்லா விட்டால் மேலும் மேலும் இவ்வாறு கொடிய பிறப்பை யெடுத்துத் தொல்லைப் பட்டுக்கொண்டிருக்க வேண்டிய தாகத்தான் முடியும். நீ எல்லா உயிர்களிடத்திலேயும் அன்பு செலுத்தி அருளுடன் நடந்துகொள், அவ்வாறு நடந்து கொள்வாயானால், கடைத் தேறுவாய். நீ நான் கூறிய இவ் வறிவுரையை உன்னுடைய உயிர்க்கு உறுதி பயப்பதாகக் கொள்ள வேண்டும்" என்று சொல்லி உப தேசித்தார் அது முதல் அப் பாம்பு பிற உயிர்களைக் கடித் துத் தொல்லை செய்யாமல் அருளுடன் நடந்து நல்ல கதியை அடைந்தது.

---

## 6. தீயும் மகாவீரரும்

ஒருநாள் மகாவீரர் ஒரு காட்டிலே பெரும் புதர் ஒன் றிலே அமர்ந்து தியானத்தில் ஈடுபட்டிருந்தார். அப்போது அப்பக்கத்திலே வணிகர்கள் பலர் கூட்டமாக வந்து தங்கி னார்கள். காடு அஞ்சத்தக்க பெருங் காடாகையால் புலி முதலிய கொடிய விலங்குகள் இரவில் வந்து தொல்லை செய்யாமல் இருப்பதற்காகப் புதரிலே தீயை வைத்து விட் டார்கள். புதர் தீ மண்டி எரிந்தது மறுநாள் வணிகர் கள் பார்த்தார்கள். மகாவீரர் கருகிய உடலுடை யவராய்த் தியானத்தில் இருப்பதைக் கண்டார்கள். இந்தப் பெரியவர் இங்கு தவஞ் செய்து கொண்டிருப்பதை யறி யாமல் நெருப்பை வைத்தோமே இப்பெரியவர் தம் முடைய தவத் தீயினால் இந்தத் தீக்குக் கூடச் சிறிதும் அஞ் சாமல் அப்படியே இருக்கிறாரே. தீ இவரை ஒன்றுஞ் செய்ய வில்லையே. இது பேராச்சரியம் என்று வியந் தார்கள்.

மகாவீரர் தியானத்தில் இருந்து இரண்டு நாட்கட்குப் பிறகு விழித் தெழுந்தார். வணிகர்கள் மகாவீரருடைய அடிகளிலே விழுந்து, "நீங்கள் இங்கு எழுந்தருளி யிருப்பதை நாங்கள் உணர்ந்து கொள்ளாமல் நெருப்புவைத்து விட்டோம். நாங்கள் அறியாமற் செய்த இக்குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்" என்று சொல்லி வேண்டிக் கொண்டார்கள். அதன் பிறகுதான் அவ்விடமெல்லாம் தீப்பற்றி யெரிந்திருப்பதை மகாவீரர் பார்த்தார். இவ்வாறு இவர் தம்முடைய தவத் தீயினால் உலகத் தீக்குச் சிறிதும் அஞ்சாமலும் அதனால் எரிக்கப்படாமலும் சிறந்து விளங்கினார்.

---

## 7. மாட்டுக்காரனும் மகாவீரரும்

ஒரு நாள் மகாவீரர் காட்டிலே ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அப்பொழுது இடையன் ஒருவன் மாட்டு மந்தை ஒன்றை மேய்த்துக் கொண்டிருந்தான். அவன் மகாவீரரைப் பெரியவர் என்று உணர்ந்து கொள்ள வில்லை. காட்டில் திரிகிற யாரோ ஒரு சோம்பேறி மனிதன் என்று எண்ணினான். அவன் மகாவீரரைப் பார்த்து, "நான் வீட்டிற்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வருகிறேன். நான் வருகிற வரையில் நீ இந்த மாடுகளைப் பார்த்துக்கொள்" என்று சொன்னான்.

மகாவீரரோ எத்தகைய மறுமொழியுஞ் சொல்ல வில்லை. ஆகவே அவர் பார்த்துக்கொள்ளுவார் என்று எண்ணிக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். சாப்பிட்டு விட்டுச் சிறிது நேரம் பொறுத்துவந்து பார்த்தான். ஒரு மாட்டைக்கூடக் காணவில்லை. மகாவீரரோ மாட்டுக் காரன் அப்பாற் சென்றஉடனேயே தியானத்தில் மூழ்கி

விட்டார். மாட்டுக்காரன் மகாவீரரைப் பார்த்து, "மாடு கள் எங்கே?" என்று கேட்டான். ஒரு விதமான மறு மொழியுங் கிடைக்கவில்லை. தன்னையே மறந்து போயிருக் கும் அவர் மாட்டுக்காரனுடைய கேள்விக்கு எப்படிப் பதில் சொல்லுவார்? ஆத்திரங் கொண்ட மாட்டுக்காரன் தன்னுடைய கையிலிருந்த தடியால் மகாவீரரைப் பலமாக அடித்தான். அவனுடைய கை சலித்துப் போய்விட்டது. இந்த மனிதன் இந்த உலகத்தையே மறந்துபோயிருக் கிறான். இவனை அடிப்பதால் பயனில்லை மாடுகளைத் தேடிப் பார்ப்போம் என்று அவ்விடம் விட்டுப் புறப்பட்டான்.

அச் சமயத்தில் அவ்வழியே வந்த சிலர் அவன் மகா வீரரை அடித்ததைப் பார்த்துக்கொண்டு வந்தபடியால் மாட்டுக்காரனைப் பிடித்துக்கொண்டு, "நீ ஏனடா அப் பெரியவரை அடித்தாய்? உன்னை எளிதாக விடமாட் டோம்" என்று கூறி அவனைப் பிடித்து அடிக்கத் தொடங் கினார்கள். மகாவீரர் திடீரென்று கண் விழித்து, "அவனை அடிக்காதீர்கள். பழிக்குப் பழிவாங்குவதனால் தீவினைதான் மிகுதிப்படும். பழிக்குப்பழி வாங்குவது மனிதத் தன் மைக்கு அடாது" என்று கூறி அந்த அறிவற்ற மாட்டுக் காரனைக் காப்பாற்றினார். இன்றேல் அம்மனிதர்கள் மாட் டுக்காரனை அடித்துக் கொன்றிருப்பார்கள்.

## 8. மகாவீரரும் நாய்களும்

சில வேடர் ஒரு சமயத்தில் மகாவீரர்மீது கடுஞ் சினங்கொண்டு சில வேட்டை நாய்களை ஏவினார்கள். அந்த வேட்டை நாய்களோ மிகப் பொல்லாதவை. புலி முதலிய பிராணிகளையுங் கிழித்தெறியத்தக்க ஆற்றல் வாய்ந்தவை. வேட்டை நாய்கள் மிகுந்த சினத்துடன்

இவரை நோக்கிப் பாய்ந்து வந்தன. மகாவீரர் அந்நாய் கட்குச் சிறிதும் அஞ்சவில்லை. புன்முறுவல் பூத்த முகத்துடன் அந்நாய்களை நோக்கியபடியே நின்றுகொண்டிருந்தார்.

நாய்கள் தமக்குச் சமீபத்தில் வந்தவுடன், "நீங்கள் என்னதான் என்னைப் பார்த்து உறுமினாலும் கடித்தாலும் துண்டு துண்டாகக் கிழித்தாலும் நான் சிறிதும் அஞ்சப் போகிறதில்லை. நீங்கள் என்னைக் கடிப்பதனால் அடையப் போகிற இலாபம் ஒன்றும் இல்லை. உங்களுடைய தீவினை தான் பெருகும். நீங்களாகவும் என்மேல் வரவில்லை. உங்களை வளர்ப்பவர்கள் என்மீது ஏவிவிட்டிருக்கிறார்கள். நீங்கள் உங்கள் வயிற்றின் கொடுமையால் அவர்கள் ஏவியதைச் செய்கிறீர்கள். அவ்வாறாக, உங்கள்மீது என்ன தவறு இருக்கிறது?" என்று சொன்னார்.

நாய்கள் அப்படியே நின்று விட்டன அவர்மீது விழுந்து கடிப்பதற்கு அவைகள் சிறிதும் துணிய வில்லை. வேடர்கள் திகைத்துப் போனார்கள். "கையில் எத்தகைய ஆயுதமும் இல்லை. அவ்வாறாகவும் இம்மனிதர் இந்நாய்களை எவ்வாறு தான் அடக்கினாரோ தெரியவில்லையே" என்று சொல்லி மிகுந்த வியப்பும் திகைப்பும் அடைந்தார்கள். பிறகு அவருடைய அடிகளிலே விழுந்து "பெரியீர்! எங்களுடைய குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள். நாங்கள் உங்களுடைய பெருமையை இப்பொழுதுதான் உணர்ந்தோம்" என்று சொல்லி வணங்கிவிட்டுப் போய் விட்டார்கள்.

---

# 9. ரிஷியா? பேனடையா?

ஒருநாள் மகாவீரரும் கோசாலன் என்பவனும் ஒன்று சேர்ந்து போய்க்கொண்டிருந்தார்கள். கோசாலன் கொள்கை வேறு. மகாவீரருடைய கொள்கை வேறு கோசாலன் மிகுந்த துடுக்குத்தனம் உடையவன். குறும்புத்தனமாகப் பேசுவான். மகாவீரரோ மிகவும் பொறுமை வாய்ந்தவர். இருவரும் சென்று கொண்டிருக்கும் வழியில் வேசாயனர் என்னும் பெயரையுடைய ஒரு முனிவர் கைகளை உயரத் தூக்கியவாறும் அசையாமலும் கண் இமைக்காமலும் கதிரவனைப் பார்த்துத் தவஞ் செய்துகொண்டிருந்தார். அவருடைய உடல் முழுவதும் பேன் அடைகள் நிரம்பியிருந்தன. கோசாலன் அந்த முனிவரைப் பார்த்ததும், "இஃதென்ன ரிஷியா பேனடையா?" என்று சொன்னான்.

இதனைக் கேட்டவுடன் வேசாயனருக்கு மிகுந்த சினம் உண்டாகியது. அவர் கோசாலனைத் தம்முடைய யோக சக்தியினால் எரித்துவிடப் பார்த்தார். அவ்வாறு எரிக்கக் கூடிய ஆற்றல் வாய்ந்தவர் தாம் அவர். மகாவீரர் தம்முடைய ஆத்மசக்தியால் முனிவருடைய யோக ஆற்றலை அடக்கிக் கோசாலனைக் காப்பாற்றினார் பிறகு முனிவரைப் பார்த்து, "முனிவரே, கோபம் பொல்லாது. எத்தனையோ முனிவர்கள் தம்முடைய கோபத்தினால் அழிந்து போயிருக்கிறார்கள். நீங்கள் கோபத்தை அடக்கவில்லையென்றால் உங்களுடைய தவத்தினால் ஏற்பட்ட பலன்தான் என்ன? இதனை நீங்கள் எண்ணிப் பார்த்தீர்களா?" என்று கேட்டார்.

முனிவர் மகாவீரருடைய உரையைக் கேட்டு மனமகிழ்ந்தார். அவரைப் பார்த்து, "நீர் மனத்தூய்மை யுடையவராக விளங்குகிறீர். நான் தவஞ் செய்துகூட எனக்குக்

கோபம் முதலியவைகளை அடக்கும் ஆற்றல் ஏற்பட வில்லை" என்று சொல்லி மகாவீரரைப் பாராட்டினார்.

## 10. சங்கமகனும் மகாவீரரும்

சங்கமகன் என்னும் பொல்லாதவன் ஒருவனுக்கு மகாவீரருடைய கொள்கைகள் பிடிக்கவில்லை. அவன் மகாவீரருக்குத் தொல்லை கொடுக்க வேண்டும் என்று எண்ணினான். ஓரிடத்தில் ஒரு பொருளைக் களவு செய்து விட்டுத் தான் மகாவீரருடைய சீடன் என்றும் மகாவீரர் தாம் தன்னைக் களவு செய்யுமாறு ஏவினார் என்றுங் கூறி னான். இதனைக் கேட்டுக் கயவர்கள் சிலர் மகாவீரரைப் பிடித்து நன்றாக அடித்துவிட்டார்கள். அவர்கள் அவ் வாறு தம்மை அடித்ததை மகாவீரர் ஒரு சிறிதும் பொருட் படுத்தவேயில்லை.

மேலும் அந்தச் சங்கமன் கோசலநாட்டு மன்னனிடம் போய், "மகாவீரன் நம்முடைய பகை நாடான மகதத்தைச் சேர்ந்த வேவுக்காரன் என்று கோள் சொல்லிவிட்டான். கோசலத்து அதிகாரிகள் மகாவீரரைப் பிடித்து அடித்து உதைத்துப் பலவாறு துன்பத்திற்கு உள்ளாக்கினார்கள். மகாவீரரோ அவைகளை யெல்லாம் ஒரு பொருட்படுத்தவே யில்லை. தாம் மெய்ஞ்ஞானத்தை அடைவதற்காகவே நாடுகடோறுந் திரிந்து கொண்டிருப்பதாகவும் எத்தகைய குற்றமுஞ் செய்யவில்லை யென்றும் பிறகு மகாவீரர் குற்ற மற்ற மெய்ஞ்ஞானி என்று தெரிந்தும் தாம் அவரைத் துன்புறுத்தியதற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அனுப்பிவிட்டார்கள். இவ்வாறு தம்மைப் பிடித்துச் சித்திரவதை செய்து தொல்லைப் படுத்தியவர்களிடத்திலும் மகாவீரர் சிறிதும் வெறுப்புக் காட்டவே இல்லை.

ஸ்ரீ இராமலிங்கம் அச்சகம், சூளை, சென்னை-7.